

# அம்ருதா

**Amrudha Tamil Monthly**

Volume 19 Issue 2
ஆண்டு 19 இதழ் 2

September 2024 Rs.30
செப்டம்பர் 2024 ரூ.30

# தங்கலான்

## ஏன் முக்கியமான படம்?

ஸ்ரீநிவாச கோபாலன்
இளங்கோ
அருணா பாரதி
கே.எஸ். சுதாகர்
சந்தியா நடராஜன்
வெ. தமிழ்க்கனல்
சுஜாதா செல்வராஜ்
டோனி கிளிஃப்
செ. சண்முகசுந்தரம்
அருள்ஜோதி முரளீதரன்
சரவணன் மாணிக்கவாசகம்
மோகன் சுப்ரமணியன்
கி. சரஸ்வதி
ஷேமஸ் ஹேனீ
ஸிந்துஜா
ப்ரஸன்னா ராமஸ்வாமி

ஆண்டு 19 இதழ் 2



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

செப்டம்பர்-2024 விலை ரூ. 30



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# இனியாவது தமிழ்நாட்டின் குரலை கேட்குமா கேரளம்?

பிரபு திலக்

மீண்டும் ஒரு பெரும் நிலச்சரிவை கேரளத்தின் வயநாடு சந்தித்திருக்கிறது. "வயநாடு நிலச்சரிவு, கேரளம் இதுவரை கண்டிராத மிகப் பெரிய இயற்கை பேரழிவு" என்று விவரித்துள்ளார் கேரள முதல்வர் பினராயிவிஜயன்.வருடம்தோறும்மழைக்காலங்களில் இப்படி வயநாடு பாதிக்கப்படுவதற்கு என்ன காரணம்? இந்த பேரழிவுக்கு தீர்வுதான் என்ன?

தென்மேற்குப் பருவமழை தீவிரமடைந்த நிலையில் ஜுலை கடைசி வாரம் தொடங்கி வயநாட்டிலும் அதன் சுற்றுவட்டார பகுதிகளிலும் தொடர்ந்து கனமழை பெய்து வந்தது. இந்நிலையில், 30.07.2024 அன்று அதிகாலை 2 மணி மற்றும் 4.30 மணிக்கு ஏற்பட்ட அடுத்தடுத்த நிலச்சரிவுகளால், வயநாடு மாவட்டத்தின் மேப்பாடி, சூரல்மலை, முண்டகை, அட்டமலை உள்ளிட்ட பகுதிகள் கடுமையாக பாதிக்கப்பட்டன. அங்குள்ள வீடுகள், கடைகள், பள்ளிகள் உள்ளிட்ட கட்டடங்கள் சில நொடிகளில் மண்ணுக்குள் புதைந்து போயின. இப்போது அந்தப் பகுதிகள் மனிதர்கள் வாழ்ந்தார்கள், அங்கே ஊர் இருந்தது என்பதற்கான தடயங்களே இன்றி கட்டாந்தரையாக காட்சியளிக்கின்றன. 1000 பேருக்கு மேலே மறைந்திருப்பார்கள் என தகவல்கள் தெரிவிக்கின்றன.

பெருமழை, அதன் தொடர்ச்சியாக வெள்ளம், நிலச்சரிவுகள், உயிரிழப்புகள் என இத்தகைய சூழ்நிலையை கேரளம் சந்திப்பது இது முதல்முறையல்ல. 2018ஆம் ஆண்டு மழையும் வெள்ளமும் கேரளத்தைப் புரட்டிப்போட்டது. வயநாடு அப்போதும் கடுமையாக பாதிக்கபட்டது. வயநாடு மட்டுமல்லாமல், இடுக்கி, கண்ணூர், திரிச்சூர், எர்ணாகுளம் உள்ளிட்ட பகுதிகளில் ஏற்பட்ட வெள்ளம், நிலச்சரிவுகளில் சிக்கி 483 பேர் உயிரிழந்தனர். 1924ஆம் ஆண்டுக்குப் பிறகு கேரளத்தில் ஏற்பட்ட மோசமான வெள்ளம் இது என்று விவரிக்கப்பட்டது. கிட்டதட்ட இரண்டு லட்சம் பேர் வெள்ள பாதிப்பு பகுதிகளில் இருந்து வேறு இடங்களுக்கு இடம் பெயர்ந்தனர்.



அடுத்த வருடமும் (2019) மழை, வெள்ளம், நிலச்சரிவுகள் தொடர்ந்தன. 2019 ஆகஸ்ட் மாதம் பெய்த கனமழையால் வயநாடு, மலப்புரம், கண்ணூர், பாலக்காடு, திருச்சூர், எர்ணாகுளம் ஆகிய மாவட்டங்களில் இரண்டே நாட்களில் 80 நிலச்சரிவுகள் ஏற்பட்டன. 121 பேர் உயிரிழந்தனர்.

தொடர்ந்து 2020, 2021 ஆகிய வருடங்களிலும் இயற்கைப்பேரிடர்களால் பாதிக்கப்பட்டது கேரளம். இரண்டு வருட இடைவெளிக்குப் பின்னர் மீண்டும் இப்போது ஒரு பேரழிவு.

நிலச்சரிவு ஏற்படுவதுக்கு கனமழை, நிலநடுக்கம், எரிமலை வெடிப்பு போன்ற இயற்கை காரணங்கள் மட்டுமல்லாமல் ஆக்கிரமிப்புகள், காடுகள் அழிப்பு, பயிர் முறைகளில் ஏற்படும் மாற்றங்கள் போன்ற மனிதனால் உருவாக்கப்பட்ட காரணங்களும் முக்கியமானவை. தற்போது வயநாட்டில் ஏற்பட்டுள்ள நிலச்சரிவுக்கு முதல் காரணம் கனமழை என்றால், இரண்டாவது காரணம் காடுகள் அழிப்பு என்கின்றனர் நிபுணர்கள்.

கேரளத்தில் 2019ஆம் ஆண்டு 83 இடங்களில் நிலச்சரிவு ஏற்பட்டது. ஆகஸ்ட் 7 மாலை ஏற்பட்ட நிலச்சரிவில் வயநாடு மாவட்டத்தில் பழங்குடி மக்கள் வசித்த மேப்படி என்ற ஒரு கிராமமே புதையுண்டு போய்விட்டது. அந்த நிலச்சரிவு இந்தியாவின் மேற்குத் தொடர்ச்சி மலைகளில் நிகழ்ந்த சுற்றுச்சூழல் சீர்கேடுகளாலேயே உருவாகியிருக்கிறது என்று, நிலச்சரிவை தொடர்ந்து நடத்தப்பட்ட ஆய்வு முடிவுகள் தெரிவித்தது குறிப்பிடத்தக்கது.

கேரள வனவியல் ஆராய்ச்சி மையத்தின் தலைமை விஞ்ஞானி டி.வி.சஞ்சீவ், 2019 மழை பாதிப்புக்குள்ளான பகுதிகளில் சேதங்களைப் பற்றி ஆராய்ந்து, எங்கெல்லாம் நிலச்சரிவுகள் நிகழ்ந்ததோ அங்கெல்லாம் அம்மலையின் மறுபக்கம் கிரானைட் குவாரிகள் அமைந்துள்ளது என்று தன் அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

இந்தியாவின் மேற்குத் தொடர்ச்சி மலைத்தொடரில் ஏற்படும் பேரிடர்களைத் தவிர்க்க என்ன செய்ய வேண்டும், என்ன மாதிரியான பாதுகாப்பு நடவடிக்கைகளை

எடுக்கவேண்டும் என்று கண்டறிய சூழலியல் ஆய்வாளர் மாதவ் காட்கில் தலைமையில் 13 பேர் கொண்ட ஆய்வுக்குழுவை 2010ஆம் ஆண்டு அமைத்தது ஒன்றிய அரசு. அந்த ஆய்வுக்குழு, 2011ஆம் ஆண்டு 522 பக்கங்களுக்கு ஆய்வறிக்கையைச் சமர்ப்பித்தது. அந்த அறிக்கையில், மேற்குத் தொடர்ச்சி மலை தொடர்களில் இயங்கி வரும் 91 குவாரிகளால் நிலச்சரிவுகள் ஏற்படும் வாய்ப்புகள் அதிகம் என்பதால் அவை அனைத்தும் உடனடியாக மூடப்பட வேண்டும் என்று கூறியிருந்தது. மாதவ் காட்கில் அறிக்கை நிலச்சரிவுகள் நிகழக்கூடிய பகுதி என்று குறிப்பிடப்பட்டிருந்த 11 இடங்களில் 2019இல் 10 இடங்களில் நிலச்சரிவு ஏற்பட்டது குறிப்பிடத்தக்கது.

சஞ்சீவ் ஆராய்ச்சி படி கேரளத்தில் ஒரு பஞ்சாயத்திற்கு ஆறு குவாரிகள் வீதம் மொத்தம் 5,924 குவாரிகள் மாநிலம் முழுவதும் படர்ந்துள்ளன. இதில் 3,332 குவாரிகள் சுற்றுச்சூழல் ரீதியாக மிக முக்கியமான இடங்களில் அமைந்துள்ளதாக காட்கில் அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மலப்புரம் மாவட்டத்தில் காவளப்புரா என்னும் பகுதியில், ஒரு குவாரி இருக்க வேண்டிய இடத்தில் ஐந்து குவாரிகள் இருந்தன. மொத்தம் ஐந்து கி.மீ. பரப்பளவில் 27 குவாரிகள். 2019இல் அங்குதான் கேரளத்தின் மிகப்பெரிய நிலச்சரிவு நிகழ்ந்தது.

வயநாட்டின் மெப்பாடியில் 2019இல் 100 ஏக்கர் பரப்பளவு தேநீர் தோட்டம் நிலச்சரிவால் மொத்தமாக அழிந்தது. இம்மலைக்குப் பின்புறம் ஒரு குவாரி பயன்பாட்டிலிருந்தது குறிப்பிடத்தக்கது.

குவாரிகளில் வெடி வெடிக்கும்போது ஏற்படும் அதிர்வுகளால் மலைக் குன்றுகள் பலவீனம் அடைகின்றன. இதனுடன், மலைப் பகுதிகளில் அனுமதிக்கப்பட்ட கட்டுமானப் பணிகளால் நீர் வழித்தடங்கள் தடுக்கப்பட்டு ஆறுகள் பாதை மாறியுள்ளதும் நிலச்சரிவுகளுக்குக் காரணமாகியுள்ளது.

இயற்கை பேரிடர்களை நம்மால் தடுக்க முடியாதுதான். ஆனால், அதன் தீவிரத்தைக் குறைக்கவும் மேற்கு தொடர்ச்சி மலையைக் காப்பற்றவும் நம்மால் முடியும். ஆங்கிலேயர்கள் காடுகளை அழித்து, தோட்டங்களாக மாற்றினார்கள். இப்போது நாம் அதை கட்டிடங்களாக மாற்றிக் கொண்டிருக்கிறோம். அதன் கோர விளைவுதான் வயநாடு நிலச்சரிவு போன்ற சம்பவங்கள்.

இன்னொன்று… வயநாடு மாவட்டத்தில் உள்ள சூரல்மலை, முண்டகை உள்ளிட்ட மூன்று கிராமங்களில் ஏற்பட்ட பேரழிவுக்கு, அப்பகுதியில் மழைக்காலங்களில் பெருக்கெடுத்து ஓடும் சாலியாறும் ஒரு காரணம். சாலியாற்றில் ஏற்பட்ட கடுமையான வெள்ளப்பெருக்கு தான், மேற்கண்ட 3 கிராமங்களில் ஏற்பட்ட பெரு நிலச்சரிவுக்கு காரணம் என்று கேரளத்தின் சூழலியல் ஆர்வலர்களே ஒப்புக்கொள்கிறார்கள்.

இந்த சாலியாற்றுக்கு தமிழ்நாட்டில் இருந்துதான் பெரும்பகுதி வெள்ளம் செல்கிறது. வயநாடு மாவட்டத்திற்குள் பெருக்கெடுத்து ஓடும் சாலியாற்றின் மூலம், தமிழ்நாட்டின் நீலகிரி மாவட்ட மேற்கு தொடர்ச்சி மலையில்தான் தொடங்குகிறது. கூடலூருக்கு மேற்கே ஓவேலி பள்ளத்தாக்கு பகுதியில் உற்பத்தியாகும் பாண்டியாறு மேற்கு நோக்கி முப்பது கிலோ மீட்டர் தொலைவுக்கு தமிழக எல்லைக்குள் ஓடி, கிளை ஆறுகளோடு இணைந்து, புன்னம்புழா என்கிற பெயரில் ஆராட்டுபாறை எனும் இடத்தில் கேரளவிற்குள் நுழைந்து சாலியாற்றோடு கலக்கிறது.

“சாலியாற்றுக்கு நீலகிரி மாவட்டத்தில் இருந்து செல்லும் தண்ணீரை தடம் மாற்றி, தமிழ்நாட்டின் கீழ் பவானி அணைக்கு கொண்டுவரலாம். இதனால், வெள்ள காலங்களில் கேரளாவில் ஏற்படும் பேரழிவை தடுக்கலாம்” என்று தமிழ்நாடு 60 ஆண்டுகளுக்கு மேலாக கத்திக்கொண்டே இருக்கிறது. கேரள காதுகளில் அது இதுவரை ஏறவே இல்லை என்பதுதான் துயரின் மிச்சமாக முடிந்திருக்கிறது.

கேரளத்தில் அரபிக் கடலை நோக்கி ஓடும் பெரும்பாலான ஆறுகளுக்கு பாசனம் கிடையாது. அப்படி ஓடும் ஆறுகளில் ஒன்று தான் சாலியாறு. எனவே, இந்த தண்ணீரை மலையைக் குடைந்து தமிழ்நாட்டுக்கு திருப்பினால், தமிழ்நாட்டின் விவசாயத்துக்கு பயன்படுத்த முடியும் என்பது தமிழ்நாட்டின் திட்டம். பாண்டியாறு புன்னம்புழா திட்டம் என்று பெயரிடப்பட்ட இந்த திட்டம் தொடர்பாக கிட்டத்தட்ட 60 ஆண்டுகளுக்கு மேலாக தமிழகத்திற்கும் கேரளாவிற்கும் இடையே பேச்சுவார்த்தை நடந்து கொண்டுதான் இருக்கிறது.

ஆண்டு ஒன்றிற்கு 14 டிஎம்சி தண்ணீர் செல்லும் இந்த பாண்டியாறு, பவானி அணைக்கு திருப்பி விடப்பட்டால், தமிழ்நாட்டில் கிட்டத்தட்ட ஒரு லட்சம் ஏக்கருக்கு மேல் பாசன வசதி பெறுவதற்கான வாய்ப்பு இருக்கிறது. கூடுதலாக மீதமுள்ள தண்ணீரை பவானி கூடுதுறையில் காவிரி ஆற்றோடு கலக்கச் செய்து, காவிரி பாயும் டெல்டாவிற்கும் கொடுக்க முடியும் என்பது விவசாயிகள் நீண்ட கால கோரிக்கை.

என்னதான் தமிழகம் கத்தினாலும் எங்கள் காதுகளில் ஏறாது என்கிற மலையாள அரசியல்வாதிகளின் பிடிவாதமும் இந்த பேரழிவு நிகழ ஒரு காரணம்.

அதிகமான மனித உயிர்களையும் காடுகளையும் இழந்துவிட்டோம், இப்போதாவது மாதவ் காட்கில் குழுவின் பரிந்துரைகளை மத்திய, மாநில அரசுகள் ஏற்க வேண்டும். பாண்டியாறு புன்னம்புழா திட்டத்தை நிறைவேற்ற கேரளா முன்வர வேண்டும்.●

# புதுதில்லியில் புதுமைப்பித்தன் கருத்தரங்கு

## *1987*

**ஸ்ரீநிவாச கோபாலன்**

'ஒரு தமிழ் எழுத்தாளருக்கு அகில இந்திய அளவில் கருத்தரங்கு நடந்தது இதுதான் முதல் தடவை. க.நா. சுப்ரமண்யம்தான் அதற்குத் தூண்டுதல்.' - வல்லிக்கண்ணன் (10.12.87)

வல்லிக்கண்ணன் இவ்வாறு பாராட்டும் கருத்தரங்கைப் பற்றிய பதிவு இக்கட்டுரை. புதுமைப்பித்தன் படைப்புகள் குறித்த இந்த இருநாள் கருத்தரங்கு க.நா. சுப்ரமண்யம் மேற்கொண்ட தீவிர முயற்சியால் புதுதில்லியில் 1987ஆம் ஆண்டு நடைபெற்றது. முதலில் இந்த தேசியக் கருத்தரங்கு நடைபெற்ற காலப்பின்னணியை விளக்குவது அவசியம். புதுமைப்பித்தன் சிறுகதைகளை முதன்முறையாக ஒருசேரக் காணும் வாய்ப்பு இதே 1987ஆம் ஆண்டில்தான் உருவானது. 'புதுமைப்பித்தன் படைப்புகள்- 1' (சிறுகதைகள்) என்ற நூலை ஐந்திணை பதிப்பகம் அப்போது வெளியிட்டிருந்தது.

ஐந்திணையின் இந்தப் பதிப்பு குறித்து பதிப்பியல் நோக்கில் விமர்சனங்கள் உண்டு என்றாலும் புதுமைப்பித்தன் கதைகள் முதலில் மொத்தமாக வாசிக்கக் கிடைத்தது இந்தப் பதிப்பின் மூலம்தான். இந்தப் பதிப்பின் அடிப்படையில் புதுமைப்பித்தன் படைப்புகள் பற்றிய விரிவான விமர்சன நூல்கள் பின்னால் எழுதப்பட்டன. இந்தநூல் வெளியாவதற்கு முன்பு, புதுமைப்பித்தன் படைப்புகள் வெளியாவதில் பல இடர்கள் இருந்தன.

புதுமைப்பித்தன் காலமான பிறகு, அவரது படைப்புகளைத் திரட்டி வெளியிடும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார் தொ.மு.சி. ரகுநாதன். புதுமைப்பித்தனுடன் நெருங்கிப் பழகிய அவர் தன்னிடமே இருந்த பிரதிகள் தவிர, புதுமைப்பித்தனின் இல்லத்திலிருந்தும் கையெழுத்துப் பிரதிகள், இதழ் நறுக்குகள் பலவற்றைச் சேகரித்தார். புதுமைப்பித்தனின் நண்பர்களில் ஒருசிலர் தங்களிடம் இருந்த பழைய ஏடுகளைக் கொடுத்தும், சில தகவல்களைக் கூறியும் அவருக்கு உதவினர். அதே சமயத்தில் அப்போதிருந்த புதுமைப்பித்தனின் சமகாலத்தவர்கள் பலர் உதவிசெய்ய மறுத்துவிட்டதையும் ரகுநாதன் ஆதங்கத்துடன் பதிவுசெய்துள்ளார். கிடைத்தவரைக்குமான படைப்புகளை ஸ்டார் பிரசுரம் மூலமாக வெளியிடுவதற்கு ரகுநாதன் ஏற்பாடு செய்தார். இதன்பொருட்டு ஸ்டார் பிரசுரத்துக்கும் புதுமைப்பித்தனின் துணைவியாருக்கும் இடையே ஓர் ஒப்பந்தம் கையெழுத்தானது. புதுமைப்பித்தனின் படைப்புகள் அனைத்தையும் ஸ்டார் பிரசுரம் வெளியிடும் என்றும் அதற்காக புதுமைப்பித்தனின் குடும்பத்துக்கு மாதம் ரூ.150 வீதம் வழங்கப்படும் என்றும் அந்த ஒப்பந்தத்தில் முடிவு செய்யப்பட்டது.



ஒப்பந்தம் கையெழுத்தான பிறகும் ஸ்டார் பிரசுரம் புதுமைப்பித்தன் படைப்புகள் அனைத்தையும் வெளியிட முடியவில்லை. புதுமைப்பித்தன் வாழ்ந்த காலத்தில் அவரது படைப்புகளின் வெளீயிட்டு உரிமையைப் வாங்கிய பதிப்பகங்கள் தங்களிடம் எஞ்சியுள்ள பிரதிகள் தீர்ந்த பிறகே உரிமையை விட்டுத்தர முடியும் என்று கூறிவிட்டன. புதுமைப்பித்தனின் சில நூல்களை வெளியிட்ட அ.கி. கோபாலன், புதுமைப்பித்தன் படைப்புகளின் முழு உரிமையும் தன்னிடம் இருப்பதாக சாதித்தார். புதுமைப்பித்தனின் குடும்பத்தார் அவரை எதிர்த்து வழக்கு தொடரவேண்டிய நிலை ஏற்பட்டது. இந்த வழக்கு முடிவதற்குள் ஆண்டுகள் ஓடிவிட்டன. இறுதியில் புதுமைப்பித்தனின் குடும்பத்தார் வசமே முழு உரிமையும் சேரும் வகையில் தீர்ப்பு கிடைத்தது. பலர் கைகளில்






அகப்பட்டிருந்த புதுமைப்பித்தனின் படைப்புகள் முழுவதும் 1950களின் தொடக்கத்தில் அவரது குடும்பத்தார் வசம் வந்துவிட்டன.

இந்த விவரங்களை எல்லாம் தொ.மு.சி. ரகுநாதன் விரிவாகப் பதிவுசெய்துள்ளார். இதற்குப் பிறகு ஸ்டார் பிரசுரம், மீனாட்சி புத்தக நிலையம், ஐந்திணை பதிப்பகம் ஆகியவை புதுமைப்பித்தன் நூல்களைத் தனித்தனித் தொகுப்புகளாக வெளியிட்டு வந்தன. இந்த நிலையில் 1987 ஆம் ஆண்டு முதல் முறையாக புதுமைப்பித்தன் கதைகளை மொத்தமாக ஒரே நூலாக வெளியிட ஐந்திணை பதிப்பகம் முன்வந்தது. 96 கதைகளுடன் ‘புதுமைப்பித்தன் படைப்புகள் ரு 1’ என்ற பெருந்தொகுப்பு வெளியானது. அதில் க.நா. சுப்ரமண்யம் விரிவான முன்னுரை ஒன்றை எழுதியிருந்தார். அதே ஆண்டில் புதுமைப்பித்தன் படைப்புகள் குறித்து தலைநகர் தில்லியில் தேசிய அளவிலான கருத்தரங்கம் ஒன்றை நடத்த வேண்டும் என ஆர்வம் கொண்டு, அது மிகச் சிறப்பாக நடக்கவும் ஆவன செய்தவர் க.நா. சுப்ரமண்யம்.

## புதுமைப்பித்தன் நினைவுக் கருத்தரங்கு:

இந்தக் கருத்தரங்கம் பற்றிக் கிடைத்துள்ள பதிவுகள், க.நா.சு.வின் தீவிரமான ஈடுபாட்டையும் உழைப்பையும் காட்டுகின்றன. கருத்தரங்கம் எவ்வாறு திட்டமிட்டு ஏற்பாடு செய்யப்பட்டது, அதில் பங்களித்தவர்கள் யார் யார் என்பதைத் தொகுத்துப் பார்க்கலாம்.

புதுமைப்பித்தன் கதைகள் மொத்தமாக வெளியாகியிருக்கும் சமயத்தில் தில்லியில் புதுமைப்பித்தனுக்கு ஒரு கருத்தரங்கை நடத்துவது அவரை தேசிய அளவில் முன்வைக்க சரியான வாய்ப்பாகஇருக்கும்என்றுக.நா.சு.கருதினார். சாகித்ய அகாடமி மூலம் அதனைச் சாதித்துக்கொள்ளும் யோசனையும் அவருக்குத் தோன்றியது. இருபது ஆண்டுகளாக தில்லியில் வசித்துவந்த க.நா.சு. 1985 ஆம் ஆண்டில் சென்னைக்குத் திரும்பியிருந்தார். அவ்வப்போது தில்லிக்கும் சென்றுவந்தார். அப்படி ஒருமுறை தில்லியில் தங்கியிருந்தபோது, அவரைப் பார்க்க நா. பார்த்தசாரதி வந்திருந்தார்.



க.நா.சுப்ரமண்யம்



நா,பார்த்தசாரதி



சா.கந்தசாமி



வெங்கட் சாமிநாதன்

நா.பா. அப்போது சாகித்ய அகாடமியில் தமிழ் மொழிக்கான கன்வீனர் பொறுப்பில் இருந்தார். க.நா.சு. அவரிடம் தில்லியில் புதுமைப்பித்தனுக்கு ஒரு கருத்தரங்கம் நடத்த வேண்டும் என்ற தன் விருப்பத்தை வெளிப்படுத்தினார். நா.பா. இது தொடர்பாக அகாடமிக்கு ஒரு கடிதம் எழுதும்படிக் கேட்டுக்கொண்டார். சென்னையில் நடக்கவிருக்கும் சாகித்ய அகாடமியின் அடுத்த ஆலோசனைக் கூட்டத்தில் இதைப்பற்றி எடுத்துக்கூறி அனுமதி வாங்கிவிடலாம் என்றும் உறுதியளித்தார்.

நா.பா. சொன்னபடி புதுமைப்பித்தனுக்கு தில்லியில் கருத்தரங்கம் நடத்துவது பற்றி அகாடமிக்குக் கடிதம் எழுதினார் க.நா.சு.. அந்தக் கடிதத்தை சென்னையில் உள்ள சாகித்ய அகாடமி அலுவலகத்தில் ஒப்படைத்தவர் சா. கந்தசாமி. இரண்டு மாதம் கழித்து, கருத்தரங்கை நடத்த அனுமதி கிடைத்துவிட்டது. 1987 நவம்பர் 28, 29 ஆகிய தேதிகளில் 'புதுமைப்பித்தன் நினைவுக் கருத்தரங்கு' என்ற தலைப்பில் இரண்டு நாள் தேசியக் கருத்தரங்கு நடத்த ஏற்பாடுகள் தொடங்கின.

மயிலாப்பூரில் இருந்த க.நா.சு.வின் இல்லத்தில் கருத்தரங்க ஏற்பாடுகள் குறித்த ஆலோசனைக் கூட்டம் நடந்தது. நா. பார்த்தசாரதி, திருப்பூர் கிருஷ்ணன், சா. கந்தசாமி முதலானவர்கள் இந்தச் சந்திப்பில் பங்கெடுத்தனர். கருத்தரங்கில் பேசவேண்டியவர்கள் பெயரை பரிந்துரை செய்து சாகித்ய அகாடமிக்கு க.நா.சு. மற்றொரு கடிதம் எழுதியிருந்தார். வல்லிக்கண்ணன், சுந்தர ராமசாமி, வெங்கட் சாமிநாதன், வலம்புரிஜான், அசோகமித்திரன், செ.ரவீந்திரன் ஆகியோரை க.நா.சு. தேர்ந்தெடுத்திருந்தார். கடைசி நேரத்தில், சுந்தர ராமசாமி தில்லிக்கு வரமுடியாத சூழல் ஏற்பட்டதால், நா.பா.வின் பரிந்துரைப்படி சா. கந்தசாமி பேச்சாளர்களில் ஒருவராகச் சேர்க்கப்பட்டார்.

வெங்கட் சாமிநாதன், செ. ரவீந்திரன், வலம்புரி ஜான் ஆகியோர் ஏற்கெனவே தில்லியில்தான் இருந்தனர். க.நா.சு.வும் கருத்தரங்குக்கு முன்பு சென்னையிலிருந்து தில்லிக்குச் சென்றுவிட்டார். அசோகமித்திரன், வல்லிக்கண்ணன், சா. கந்தசாமி மூவரும் கருத்தரங்கில் கலந்துகொள்வதற்காக ரயிலில் ஒன்றாகப் புறப்பட்டனர். 1987 நவம்பர் 25ஆம் தேதி கிராண்ட் ட்ரங்க் எக்ஸ்பிரஸ் ரயிலில் சென்னையிலிருந்து தில்லிக்குப் பயணித்தார்கள். நவம்பர் 27ஆம் தேதி காலையில் ரயில் தில்லியை அடைந்தது.

அடுத்த இரண்டு நாளும் கருத்தரங்கு நடைபெற்றது. நவம்பர் 28ஆம் தேதி, முதல் நாளில் வலம்புரிஜான் கருத்தரங்கைத் தொடங்கி வைத்தார். க.நா. சுப்ரமண்யம் 'இந்திய இலக்கியத்தில் புதுமைப்பித்தன் சிறுகதைகள்' என்ற தலைப்பில் சிறப்புரை வழங்கினார். சாகித்ய அகாடமியின் 'இந்திய இலக்கியச் சிற்பிகள்' வரிசையில் புதுமைப்பித்தன் பற்றி வல்லிக்கண்ணன் எழுதிய நூல் வெளியிடப்பட்டது. முதல் பிரதியை வலம்புரிஜான் பெற்றுக்கொண்டார்.

நூல் வெளியீட்டுக்குப் பின் நடைபெற்ற முதல் அமர்வு கே.எஸ். ஸ்ரீனிவாஸன் தலைமையில் நிகழ்ந்தது. அசோகமித்திரன் ('புதுமைப்பித்தன் கதைகளில் உருவமும் உள்ளடக்கமும்'), வலம்புரிஜான் ('புதுமைப்பித்தனின் யதார்த்தவாதம்'), வெங்கட் சுவாமிநாதன் ('புதுமைப்பித்தன் கதைகளில் சமூகப் பார்வை') ஆகியோர் உரையாற்றினர்.

இரண்டாவது அமர்வு எம். வரதராஜன் தலைமையில் நடைபெற்றது. இந்த அமர்வில் வல்லிக்கண்ணன் ('புதுமைப்பித்தனின் விமர்சனப் பார்வை'), செ. ரவீந்திரன் ('தமிழ் புதுக்கவிதையின் முன்னோடி புதுமைப்பித்தன்'), சா. கந்தசாமி ('புதுமைப்பித்தனுக்குப் பிறகு தமிழ்ச் சிறுகதைகள்') மூவரும் பேசினார்கள்.

வல்லிக்கண்ணன், சா. கந்தசாமி இருவரும் தங்கள் உரையை தமிழில் வழங்கினர். மற்றவர்களின் உரை ஆங்கிலத்தில் அமைந்திருந்தது.

நவம்பர் 29ஆம் தேதி, இரண்டாம் நாளில் கலந்துரையாடல் அமர்வு நடைபெற்றது. 'நவீனத்



வல்லிக்கண்ணன்



வலம்புரி ஜான்



தம்பி சீனிவாசன்



கே.எஸ்.ஸ்ரீனிவாசன்

தமிழ்ச் சிறுகதைகளில் புதுமைப்பித்தனின் தாக்கம்' என்ற தலைப்பில் அமைந்த இந்த அமர்வுக்கு வல்லிக்கண்ணன் தலைமை வகித்தார். க.நா.சு. தொடக்கவுரை வழங்கினார். அதைத் தொடர்ந்து புதுமைப்பித்தன் படைப்புகள் பற்றி கலந்துரையாடல் நடந்தது. நிகழ்ச்சிக்கு வந்திருந்த பிறமொழி எழுத்தாளர்களும் வாசகர்களும் இதில் பங்கெடுத்தார்கள். புதுமைப்பித்தன் படைப்புகளை ஊன்றிப் படித்திருந்த தில்லிவாழ் தமிழர்கள் பலர் இரண்டு நாட்களும் கருத்தரங்கில் கலந்துகொண்டார்கள்.

இரண்டாம் நாளில் நடந்த கலந்துரையாடல் அமர்வுக்கு நா. பார்த்தசாரதி தலைமை ஏற்பதாக இருந்தது. கருத்தரங்கிற்குச் சில நாட்கள் முன்பாக, மலேசியா சென்ற அவர் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில் கலந்துகொண்டு, அங்கிருந்து தில்லி வருவதாகத்திட்டமிடப்பட்டிருந்தார். மலேசியாவில் வைத்து அவருக்கு உடல்நலக்குறைவு ஏற்பட்டதால், அவசரமாக சென்னை திரும்பவேண்டி வந்தது. இதனால் அவர் கருத்தரங்கில் கலந்துகொள்ள முடியவில்லை. அவருக்குப் பதிலாக வல்லிக்கண்ணன் கலந்துரையாடல் அமர்வுக்கு தலைமையேற்று நடத்தினார்.

இரண்டு நாள் கருத்தரங்கு முடிந்த பிறகு, தில்லி வந்திருந்த தமிழ் எழுத்தாளர்களுக்கு தில்லி தமிழ் எழுத்தாளர் சங்கம் சார்பாக பாராட்டுக் கூட்டம் ஒன்றும் ஏற்பாடு செய்யப்பட்டது.

டிசம்பர் 2ஆம் தேதி வல்லிக்கண்ணன், அசோகமித்திரன், சா. கந்தசாமி மூவரும் தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் ரயிலில் மீண்டும் தமிழகம் திரும்பினர். டிசம்பர் 4ஆம் தேதி அவர்கள் ரயிலிலிருந்து இறங்கும்போது சென்னையில் நல்ல மழைநாளாக இருந்தது.

கருத்தரங்கைப் பற்றிய பதிவுகள்:

சாகித்ய அகாடமியின் 1986 - 87 ஆண்டறிக்கையில் இந்தக் கருத்தரங்கின் நிகழ்ச்சி நிரலும் பங்கேற்றவர்கள் விவரமும் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. தில்லியில் வெளியான பத்திரிகைகளிலும் நாளேடுகளிலும் கருத்தரங்கைப் பற்றிய செய்திகளும் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. தில்லி ஆங்கிலப் பத்திரிகைகள் இந்தக் கருத்தரங்கை ஒட்டி புதுமைப்பித்தன் படைப்புகளின் மொழிபெயர்ப்பையும் வெளியிட்டுள்ளன. வெங்கட் சாமிநாதன் மொழியாக்கத்தில் 'கயிற்றரவு' கதை The Patriot பத்திரிகையில் வெளிவந்துள்ளது. டிசம்பர் 19, 1987 தேதியிட்ட Mainstream பத்திரிகையில் புதுமைப்பித்தன் நினைவுக் கருத்தரங்கம் பற்றி ஜக் மோகன் (Jag Mohan) என்பவர் எழுதிய செய்திக் கட்டுரை வெளியாகியுள்ளது. கட்டுரையாசிரியர் கருத்தரங்க நிகழ்வுகளைக் கூறிவிட்டு, தான் சென்னையில் புதுமைப்பித்தனுடன் பழகிய நினைவுகளை மிகச் சுருக்கமாக இரண்டே வரிகளில் எழுதியிருக்கிறார். புதுமைப்பித்தன் தன்னிடமுள்ள புத்தகங்களை வாசிக்கக் கொடுப்பார் என்றும் அடிக்கடி இருவரும் சேர்ந்து மூர் மார்க்கெட்டுக்கு நடந்து செல்லும்போது அவருடன் உரையாடியதால் இலக்கியத்தில் தனது பார்வை விசாலமானது என்றும் குறிப்பிடுகிறார். புதுமைப்பித்தன் நட்புகொண்டிருந்த இந்த ஜக் மோகன் யார் என்று தெரியவில்லை.

தமிழ்நாட்டுப் பத்திரிகைகளில் உடனடியாக செய்தியோ கட்டுரையோ வெளியானதா என்பதை அறிய, போதிய அளவுக்கு இதழ்களைப் பார்வையிட முடியவில்லை. கருத்தரங்கில் கலந்துகொண்டவர்கள் ஆங்காங்கே சில குறிப்புகளை அளித்துள்ளனர். அசோகமித்திரன் 'புதுடில்லியில் புதுமைப்பித்தன்' ('கணையாழி', மே 1988) என்ற கட்டுரையை எழுதியுள்ளார். புதுமைப்பித்தன் கதைகள் மொத்தமாக வெளியானவுடன் இந்தக் கருத்தரங்கு நடந்ததும், புதுமைப்பித்தன் பற்றிய நூலும் உடன் வெளியானதும் முக்கியமானவை என அசோகமித்திரன் குறிப்பிடுகிறார். தமிழ்ப் பத்திரிகைகளில் இந்தக் கருத்தரங்கைப் பற்றிய பதிவுகள் இல்லை என்றும் கூறுகிறார். வெ.சா., வல்லிக்கண்ணன், சா. கந்தசாமி ஆகியோரும் தங்கள் கட்டுரைகளில் இந்தக் கருத்தரங்கைப்



அசோக மித்திரன்



திருப்பூர் கிருஷ்ணன்



செ.ரவீந்திரன்



சுந்தர ராமசாமி

பற்றிய குறிப்புகளைக் கொடுத்துள்ளனர். இவர்கள் அனைவரும் இந்தக் கருத்தரங்கு நடைபெறுவதற்காக க.நா.சு. மிகுந்த ஆர்வம் காட்டியதை தவறாமல் பதிவுசெய்துள்ளனர்.

வல்லிக்கண்ணன் தனது கட்டுரைகளிலும் கடிதங்களிலும் கருத்தரங்க நிகழ்வுகளை ஓரளவு வரிசைக்கிரமாகக் கூறுகிறார். க.நா.சு.வின் முயற்சியால்தான் இந்தக் கருத்தரங்கு நடந்தது என்பதைக் கூறிவிட்டு, நா.பா. உடல்நலக்குறைவு ஏற்பட்டு கலந்துகொள்ள முடியாமல்போனது பற்றியும் வருத்தத்துடன் எழுதியிருக்கிறார்.

க.நா.சு. தன்னைப் பற்றிக் கடுமையாக விமர்சித்து எழுதிக்கொண்டிருந்த வலம்புரிஜானையும் கருத்தரங்கிற்கு அழைத்தது பற்றியும் அவர்கள் இருவருக்குமிடையே சமரசம் ஏற்பட்டது பற்றியும் வெங்கட் சாமிநாதன் எழுதியுள்ளார். க.நா.சு. இதுபோன்ற பணிகளில் உதவி தேவைப்படும்போது, அதற்குரிய நபர்கள் தன்னுடன் சுமுகமான உறவில் இல்லாதவர்களாக இருந்தாலும் தயங்காமல் அணுகக்கூடியவர் என்பதை வெ.சா. விவரிக்கிறார்.

கருத்தரங்கில் உரை வழங்கிய செ. ரவீந்திரன் எழுதிய பதிவுகள் கிடைக்காதபோதும், அவரைத் தொடர்புகொண்டு பேசியபோது, க.நா.சு.வினால்தான் தில்லியில் புதுமைப்பித்தன் கருத்தரங்கம் நடந்தது என்று அழுத்தமாகக் கூறினார். அவரது பேச்சின் மூலம் மேலும் சில தகவல்களை உறுதிசெய்துகொள்ள முடிந்தது.

இந்தக் கருத்தரங்கு பற்றி விவரம் அறிய புதுமைப்பித்தனின் புதல்வியார் திருமதி தினகரி சொக்கலிங்கம் அவர்களைத் தொடர்புகொண்டபோது, தில்லியில் இப்படியொரு கருத்தரங்கு நடைபெற்றதாகவே தங்களுக்குத் தெரியாது என்று கூறினார்.

**க.நா.சு.வின் பங்களிப்பு:**

நவீனத் தமிழ் இலக்கிய முன்னோடிகளில் புதுமைப்பித்தன், கு.ப. ராஜகோபாலன், மௌனி ஆகிய மூவரைப் பற்றியும் விரிவாக எழுதியவர் க.நா. சுப்ரமண்யம். இவர்களின் படைப்புகள் முழுமையாகத் தொகுக்கப்பட்டு சிறப்பாக வெளியாக வேண்டும் என்று மிகவும் விரும்பினார். அதற்காக வாழ்நாள் முழுவதும் தன்னால் இயன்ற வழிகளில் எல்லாம் முயன்றார். இம்மூவரின் நூல்களும் மறுபதிப்பு வெளியாகும்போதெல்லாம் க.நா.சு. எழுதிய முன்னுரையோ சிறுகுறிப்போ அதில் இடம்பெற்றிருக்கிறது. அந்த அளவுக்கு இவர்கள்மீது மிகுந்த ஈடுபாடும் மதிப்பும் கொண்டிருந்தார். குறிப்பாக, தமிழ்ச் சிறுகதையின் தலைமகனான புதுமைப்பித்தன் பற்றியும் அவர் படைப்புகள் பற்றியும் விரிவாக எழுதிய ஒருசிலரில் முக்கியமானவர் க.நா. சுப்ரமண்யம். நவீனத் தமிழ் எழுத்தாளர்களின் படைப்புகளை முழுமையாக வாசித்து விரிவான விமர்சனம் எழுதும் வழக்கத்தைத் தொடங்கிவைத்தவர் என்றும் சொல்லாம். ஆனால், அவரது பங்களிப்பு போதிய கவனம் பெறாமலே இருக்கிறது. ஆய்வாளர்களின் ஆர்வமும் இந்தத் திசையில் செல்லவில்லை.

1987ஆம் ஆண்டு புதுதில்லியில் நடைபெற்ற புதுமைப்பித்தன் நினைவுக் கருத்தரங்கு க.நா.சு. புதுமைப்பித்தனுக்குச் செய்த தொண்டுகளில் மிக முக்கியமானது. இந்தக் கருத்தரங்கிற்கு முன், ஐந்திணை பதிப்பகம் வெளியிட்ட புதுமைப்பித்தன் கதைகளின் மொத்தத் தொகுப்புக்கு ‘புதுமையும் பித்தமும்’ என்ற விரிவான முன்னுரையை எழுதினார் க.நா.சு.. புதுமைப்பித்தன் படைப்புலகம் பற்றி எழுதப்பட்ட மிகச்சிறந்த கட்டுரைகளில் ஒன்று அது. அந்தக் கட்டுரையைப் பற்றிக் கூறும் சுந்தர ராமசாமி, ‘புதுமைப்பித்தனை முதல் முறையாகப் படிக்க முற்படும் வாசகனுக்கு க.நா.சு. ‘புதுமையும் பித்தமும்’ என்ற தலைப்பில் ஐந்திணைப் பதிப்பக வெளியீடான ‘புதுமைப்பித்தன் படைப்புகள்’ முதல் தொகுப்புக்கு 1987இல் எழுதிய நீண்ட முன்னுரை மிகவும் உபயோகமானது’ என்று பாராட்டுகிறார். ஆனால், ஐந்திணை பதிப்புக்குப் பின், புதுமைப்பித்தன் கதைகளை மொத்தமாகத் தொகுத்தும் பகுத்தும்

(தொடர்ச்சி 20ஆம் பக்கம்)

# விவரமறியாத வயதில் திசை அறியாத பயணம்

**மாயா ஆஞ்சலு**
**தமிழில்: பெர்னார்ட் சந்திரா**

மாயா ஆஞ்சலுவின் 'கூண்டுப்பறவை ஏன் பாடுகிறதென்று எனக்குத் தெரியும்' என்னும் நூலிலிருந்து ஒரு பகுதி இது. பல்வேறு நெருக்கடிகளோடு போராடும் நிலையிலும் மனஉறுதியால் தன்னை நிலைநாட்டிக்கொள்ள விழையும் கவித்துவ மனதின் குரலே இந்த நூல். அடிமைத்தளை தீவிரமாக வேரூன்றியிருந்த அமெரிக்கத் தெற்கு மாநிலங்களில் கறுப்பின மக்களது அப்போதைய வாழ்நிலையின் அவலங்களையும் வேதனைகளையும் இந்தத் தன்வரலாற்று நூலில் கவிஞர் மாயா ஆஞ்சலு விரிவாகக் கூறுகிறார்...

எனக்கு மூன்று வயதும் பெய்லிக்கு நான்கு வயதுமாகஇருந்தபோது,கைகளில் கட்டப்பட்ட அடையாள அட்டைகளுடன் நாங்கள் பழைய நெடியடிக்கும் அந்த ஊருக்கு வந்து சேர்ந்தோம். அவற்றில்'பொதுவான அறிவிப்பு: கலிபோர்னியாவின் லாங்பீச்சிலிருந்து அர்க்கான்ஸாஸிலுள்ள ஸ்டாம்ப்ஸ் நகரத்திலுள்ள திருமதி ஆனி ஹெண்டர்சன்னிடம் செல்கின்ற மார்கிரெட்டும் இளைய பெய்லி ஜான்சனும்" என்று எழுதப்பட்டிருந்தது.

எனது பெற்றோர்கள் பெருந்துயரமாகிப்போன தங்களது மணவாழ்வை முறித்துக்கொள்ள முடிவெடுத்ததும் அப்பா எங்களைத் தனது அம்மா வீட்டிற்கு அனுப்பி வைத்தார். எங்களைப் பார்த்துக்கொள்ள ஒரு சுமை தூக்குபவரிடம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது, அடுத்த நாள் அரிஸோனாவில் அவர் இறங்கிவிட்டார். எங்களது பயணச்சீட்டுகள் எனது சகோதரனின் உள்கோட்டுப் பையில் குத்தி வைக்கப்பட்டிருந்தன.

அந்தப் பயணத்தைப் பற்றி எனக்குப் பெரிதாக நினைவில்லை. ஆனால், தெற்குப் பகுதியில் கறுப்பர்களுக்கு ஒதுக்கப்பட்ட பயணப் பகுதியில் நான் கொஞ்சம் ஆசுவாசமாக உணர்ந்திருக்க வேண்டும். நிரம்பிய உணவுப் பெட்டிகளோடு எப்போதும் பயணம் செய்யும் நீக்ரோ பயணிகள், தாயில்லாத பாவப்பட்ட செல்லங்களான எங்கள் மீது இரக்கப்பட்டு, வதக்கிய கோழியும் உருளைக்கிழங்குக் காரக்கறியும் தந்தனர்.

வடக்கேயுள்ள நகரங்களில் ஓரளவுக்கு வசதி ஏற்படுத்திக்கொண்ட பெற்றோரிடம் சேர்வதற்காகவோ அல்லது வசதிமிக்க வடக்கு நம்பிக்கையளித்திருந்த பொருளாதார முன்னேற்றம் கிடைக்காமல்போனதால் தெற்குப்பகுதி ஊர்களிலிருக்கும் பாட்டிமார்களிடம் திரும்பிப் போவதற்காகவோ கறுப்பினச் சிறார்கள், பயந்து நடுங்கியபடித் தன்னந்தனியாக அமெரிக்கதேசத்தைக் குறுக்கும் நெடுக்குமாக ஆயிரக்கணக்கான தடவை கடந்து சென்றிருக்கிறார்கள் என்பதை பல ஆண்டுகளுக்குப் பின்னர் நான் அறிந்துகொண்டேன்.

நாங்கள் வருவதற்கு முன்பு புதியவற்றையெல்லாம் அந்த ஊரில் வசிப்பவர்கள் எப்படி எதிர்கொண்டார்களோ அப்படியேதான் நாங்கள் வந்தபோதும் அந்த நகரம் எங்களை எதிர்கொண்டது. கொஞ்ச நாட்கள் எந்தவித ஆர்வமும் இல்லாமல், ஆனால், எச்சரிக்கையுடனும் எங்களைப் பார்த்தது. சில நாட்களுக்குப் பின் நாங்கள் தொல்லைதராதவர்கள் (சிறு பிள்ளைகளாக வேறு இருந்தோம்) என்று தோன்ற, ஒரு அந்நியக் குழந்தையைத் தழுவும் தாயைப் போல நேசத்தோடு, ஆனால், ரொம்பவும் அந்நியோன்யம் காட்டாமல் அரவணைத்துக்கொண்டது அந்த ஊர்.

எங்கள் பாட்டி, சித்தப்பாவுடனும் அந்த ஸ்டோரின் (ஸ் என்ற முதலெழுத்தை எப்போதும் அவள் அழுத்திச்சொல்வதுண்டு)பின்கட்டில் நாங்கள் வசித்தோம். பாட்டி சொந்தமாக இருபத்தைந்து வருடமாக நடத்தி வந்த ஸ்டோர் அது.

நூற்றாண்டின் ஆரம்பத்தில் அம்மா (நாங்கள் பாட்டி என்று சொல்வதைச் சீக்கிரத்திலேயே விட்டுவிட்டோம்) கிழக்கு ஸ்டாம்ப்ஸின் மரத் தொழிற்சாலைப் பகுதியில் மரமறுக்கும் தொழிலாளர்களுக்கும் மேற்கு ஸ்டாம்ப்ஸில் பருத்தியிலிருந்து கொட்டைகளைப் பிரிக்கும் வேலை செய்பவர்களுக்கும் உணவு விற்றுக்

கொண்டிருந்தாள். மொறுமொறுவென்ற இறைச்சியும் ஜில்லென்ற எலுமிச்சைப் பானகமும், இவற்றோடு ஒரே நேரத்தில் இரண்டு இடங்களில் விற்பனை செய்யக்கூடிய அவளது அபூர்வத் திறமையும் சேர்ந்து, அவளது வியாபார வெற்றியை உறுதிசெய்தன. நடமாடும் உணவுக் கடையாக இருந்ததை அவள் பிறகு பணம் புழங்கும் இரண்டு பகுதிகளுக்கு நடுவில் ஒரு பெட்டிக்கடையாகச் சில ஆண்டுகள் நடத்தி தொழிலாளர்களின் உணவுத் தேவையைக் கவனித்துக்கொண்டாள். அதன் பிறகு நீக்ரோ மக்கள் வசிக்கும் பகுதியின் மையமான ஓரிடத்தில் ஸ்டோரைக் கட்டினாள். காலப்போக்கில் அது நகரத்தின் சாதாரண மக்கள் கூடும் இடமாக ஆகிவிட்டது. சனிக்கிழமைகளில் நாவிதர்கள் ஸ்டோரின் தாழ்வார நிழலில் தங்கள் வாடிக்கையாளர்களை உட்கார வைத்து வேலை பார்த்தார்கள்; தென்பகுதியில் ஓயாது சுற்றித்திரியும் தெருப்பாடகர்கள் ஸ்டோரின் பெஞ்சுகளில் உட்கார்ந்து மோர்சிங்கையும் நாட்டுக் கிடாரையும் இசைத்தபடி துயரமான பிரகோஸ் பாடல்களைப் பாடிக் கொண்டிருப்பார்கள்.

ஸ்டோரின் உண்மையான பெயர் வில்லியம் ஜான்சன் ஜெனரல் மெர்கன்டைஸ் ஸ்டோர். வாடிக்கையாளர்களுக்கு அங்கு உணவுப் பொருட்கள், ஏராளமான வண்ணங்களில் நூல்கள், பன்றிகளுக்கான தானியத் தவிடு, கோழித் தீவனம், விளக்குகளுக்கான நிலக்கரி எண்ணெய், வசதியுள்ளவர்களுக்கு மின்சார பல்புகள், காலணி ரகங்கள், சிகையலங்காரப் பொருட்கள், பலூன்கள், பூச்செடி விதைகள் எல்லாம் கிடைக்கும். கண்களில் படாதவற்றை ஆர்டர் செய்து பெற்றுக்கொள்ளலாம்.

அந்த ஸ்டோருக்கு நாங்களும் அந்த ஸ்டோர் எங்களுக்கும் முழுமையாக பழகும் வரையிலும் நாங்கள், ஒரு வினோதக் காட்சியரங்கிற்குள் அடைபட்டுக் கிடந்தோம். அதைக் கவனித்துக் கொள்பவன் ஒரேயடியாக போய்விட்டிருந்தான்.

ஒவ்வொரு ஆண்டும் ஸ்டோருக்குஎதிர்ப்புறமிருந்த வயல்கள் கம்பளிப் புழுக்களின் பச்சை நிறத்திலிருந்து பனித்துகளின் வெண்மைக்குப் படிப்படியாக மாறுவதைப் பார்த்துக் கொண்டிருப்பேன். எவ்வளவு நேரத்துக்கு முன்னால் பெரிய ஒரு வண்டி வந்து பஞ்சுப் பறிப்பவர்களை அதிகாலையிலேயே ஏற்றிக்கொண்டு அடிமைத்தனம் இன்னமும் எஞ்சியிருக்கும் பருத்தித் தோட்டங்களுக்குக் கொண்டு செல்லும் என்று என்னால் துல்லியமாகச் சொல்ல முடியும். பஞ்சு பறிக்கும் காலங்களில் எனது பாட்டி அதிகாலை நான்கு மணிக்கு (அவள் அலாரம் கடிகாரத்தைப் பயன்படுத்தியதில்லை) எழுந்து முழந்தாளிட்டு உறக்கம் நிறைந்த குரலில் வேண்டுதல் செய்வாள். “தந்தையே, இந்தப் புதிய தினத்தைக் காணும் வாய்ப்பை எனக்கு அளித்ததற்கு நன்றி. நேற்றிரவு நான் படுத்த படுக்கை நான் விறைத்துக் கிடக்கும் பலகையாகவோ, எனது போர்வை எனக்குரிய சல்லாத் துணியாகவோ மாறிவிட நீர் அனுமதியாததற்கு நன்றி. இன்றைய தினத்தில் நேரான, சுருக்குப் பாதையில் எனது கால்களை வழிநடத்துவீராக. இந்த வீட்டையும் இதிலுள்ள எல்லோரையும் ஆசீர்வதிப்பீராக. உமது திருமகன் இயேசுவின் பெயரால் உமக்கு நன்றி. ஆமென்.”

முழுவதுமாக அவள் எழுந்திருக்கும் முன்பே எங்களைப் பெயர் சொல்லி அழைத்து உத்தரவுகள் போட்டுவிட்டுத் தனது பெரிய பாதங்களை நாட்டுச் செருப்புகளில் நுழைத்துக்கொண்டு, கடுங்கார நீரால் சுத்தம் செய்யப்பட்ட மரத்தரையில் நடந்து சென்று நிலக்கரி எண்ணெய் விளக்கைப் பற்ற வைப்பாள்.

அந்த விளக்கின் ஒளி ஸ்டோருக்குள் எங்கள் உலகத்துக்கான ஒரு மெல்லிய நம்பகத்தன்மையைத் தந்துகொண்டிருந்ததால், என்னை அது கிசுகிசுப்பான குரலில் பேசவும் நுனிக்காலில் நடக்கவும் ஆசைபட வைக்கும். வெங்காயம், ஆரஞ்சு, மண்ணெண்ணெய் இவற்றின் மணங்கள் இரவு முழுவதும் ஒன்றாகக் கலந்து, வாசல் மரப்பலகைகளை அகற்றும்வரையிலும், தம் போக்கில் இருந்துகொண்டிருக்கும்; மைல்கணக்காக நடந்து தங்களை வேலைக்கு ஏற்றிச் செல்லும் இடத்திற்கு வருபவர்களோடு அதிகாலை நேரக் காற்றும் ஸ்டோரின் உள்ளே நுழைந்துவிடும்.

“அக்கா, எனக்கு இரண்டு டின் சாளை மீன் வேண்டும்.”

“நான் இன்றைக்கு எவ்வளவு வேகமாக வேலை செய்யறேன் என்று பார்த்துக்கொண்டிரு; அந்த வேகத்தைப் பார்த்தால் நீயெல்லாம் எதுவும் செய்யாமல் நிற்பதுபோல இருக்கும்.”

“எனக்கு ஒரு பெரிய சீஸ் துண்டும் கொஞ்சம் மொறுமொறு மிட்டாய் பிஸ்கெட்டுகளும் வேண்டும்.”

“எனக்கு இரண்டு கடலைமிட்டாய் தாருங்கள்.” இது தனது மதியச் சாப்பாட்டைக் எடுத்துக்கொண்டு போக வரும் பஞ்சு பறிப்பவர் கேட்டது. அவரது தொளதொள மேலாடையின் நுனியில் வழப்பான பழுப்புநிறக் காகிதக் கோணி இணைக்கப்பட்டிருந்தது. நண்பகல் சூரியன் வேலையாட்களை ஓய்வெடுக்க விரட்டுவதற்கு முன்னால் அவர் அந்த மிட்டாய்களை நொறுக்குத் தீனியாக எடுத்துக்கொள்வார்.

ஸ்டோர், இதமான அந்தக் காலைப்பொழுதுகளில் சிரிப்புகளாலும் கேலிகளாலும் தற்பெருமைகளாலும் சவடால்களாலும் நிறைந்திருக்கும். ஒருவன் இருநூறு ராத்தல் பஞ்சைப் பறிக்கப் போகிறானாம், மற்றொருவன் முன்னூறு ராத்தல். சில சிறுவர்கள்கூட நான்கு பண்டல்கள், ஆறு பண்டல்கள் என்று வீட்டுக்குக் கொண்டுவரப்போகிறார்களாம்.

முதல் நாளில் அதிகம் பஞ்சு பறித்தவரே மறுநாள் காலைப் பொழுதின் கதாநாயகன். இன்றைக்குத் தோட்டத்தில் பஞ்சு குறைவாகத்தான் இருக்கும், கோந்துபோட்டு ஒட்டியதுபோல கொட்டையோடு




சேர்ந்திருக்கும் என்று அவர் கணித்துச் சொன்னால் கேட்பவர்கள் அனைவருமே ஊமென்று அதை ஆமோதிப்பார்கள்.

காலி பஞ்சுக் கோணிப்பைகள் தரையில் உராயும் சத்தத்தையும்நடப்பவர்களின் முணுமுணுப்புகளையும் நாங்கள் ஐந்து சென்ட் வியாபாரத்துக்காக ஒவ்வொருமுறைஇயக்கும் பணப்பதிவு இயந்திரத்தின் ஒலி ஊடறுக்கும்.

காலை நேர ஓசைகளிலும் மணங்களிலும் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒரு தீண்டல் இருக்கும் என்றால், பின்மாலைப் பொழுதுகளோ வழக்கமான அர்க்கான்ஸாஸ் வாழ்க்கையின் பண்புகளைக் கொண்டிருக்கும். மங்கிக்கொண்டிருக்கும் சூரியனின் வெளிச்சத்தில் அவர்கள் இழுத்து நடப்பது தங்களைத்தான், காலிப் பஞ்சுக் கோணிப்பைகளை அல்ல.

மறுபடியும் ஸ்டோருக்குக் கொண்டுவரப்பட்டு வண்டிகளின் பின்புறத்திலிருந்து இறங்கும் அவர்கள், தாளாத சோர்வுடன் தரையில் மடங்கி உட்காருவார்கள். எவ்வளவு பறித்திருந்தாலும் அவர்களுக்கு அது காணாது. அவர்களது கூலி எனது பாட்டியிடம் அவர்கள் பட்ட கடனை அடைப்பதற்குக்கூடப் போதாது. நகரப் பகுதியிலிருக்கும் வெள்ளையர் உணவுப் பொருள் பண்டகசாலையில் அவர்கள் பெயரிலிருக்கும் பற்றுச் சீட்டுகளைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை.

ஒவ்வொரு நாள் காலைப் பொழுது ஓசைகளின் இடத்தை, ஏமாற்றுக்காரக் கொள்முதல் நிலையங்கள், எடையைக் குறைத்துக் காட்டும் தராசுகள், பாம்புகள், அடர்த்தியில்லாத பஞ்சு, புழுதி சூழப்பட்ட வரிசைகள் பற்றிய எரிச்சல் குரல்கள் எடுத்துக்கொண்டுவிடும். பின்னாட்களில் நான் யாராவது பஞ்சு பறிப்பவர்களைக் கேளிக்கையாகப் பாடிக்கொண்டே வேலை செய்பவர்கள் என்பது போன்ற வழக்கமான சித்திரத்தை வைத்தால் அவர்களோடு அடங்காச் சினத்துடன் மோதுவேன்; என் சக கறுப்பர்கள்கூட எனது இந்த ஆவேசப்படும் வியாதி தர்மசங்கடப்படுத்துவதாகக் கூறுவார்கள். ஏனென்றால் வன்மம் மிகுந்த சிறிய பஞ்சுக் காய்கள் கீறிய விரல்களை நான் பார்த்திருக்கிறேன்; வேறெந்த வேலைகளுக்கும் பணிய முடியாமல் போய்விட்ட முதுகுகளை, தோள்களை, கைகளை, கால்களைப் பார்த்த சாட்சியாக நானிருக்கிறேன்.

சில வேலையாட்கள் தங்கள் கோணிப்பைகளை மறுநாள் நான் எடுத்துக்கொள்ளுவதற்காக ஸ்டோரிலேயே விட்டுவிட்டுப் போவார்கள். சிலர் கிழிசல்களைத் தைப்பதற்காக வீட்டுக்கு எடுத்துச் செல்வார்கள். அந்த நாளின் வேலையில் மரத்துப்போன தங்களது விரல்களால், நிலக்கரி எண்ணெய் விளக்கின் அடியில், கரடுமுரடான பைகளை அவர்கள் தைத்துக்கொண்டிருப்பதை மனதில் காட்சிப்படுத்தி வெதும்பியிருக்கிறேன். இனி சொற்ப நேரத்திற்குள் அவர்கள் ஹெண்டர்சன் அக்காவின் ஸ்டோருக்கு மீண்டும் நடந்துவர வேண்டும்; வந்து, சாப்பிட ஏதாவது வாங்கிக்கொண்டு மறுபடியும் வண்டிகளில் ஏறிச் செல்ல வேண்டும். அந்த ஆண்டைக் கடத்துவதற்காக அன்றைய தினத்திலாவது ஏதாவது சம்பாதிக்க மாட்டோமா என்று, அந்தப் பஞ்சு பறிக்கும் பருவத்தை எப்படித் தொடங்கினார்களோ அதே நிலையில்தான் முடிக்கப் போகிறாமென்ற கனத்த புரிதலுடன், அந்த நாளை எதிர்கொள்வார்கள். மூன்று மாதக் குடும்பச் செலவிற்குப் பணமோ கடன் வசதியோ இருக்கப் போவதில்லை. பஞ்சு பறிப்புக் காலத்தின் பிற்பகல் நேரங்கள் தெற்குக் கறுப்பர்களின் கோரமான வாழ்க்கையை வெளிப்படுத்திக்கொண்டிருக்கும்; காலை வேளைகளோ இயற்கையின் கொடைகளான மதி மயக்கம், மறதி இவற்றாலும் மென்மையான விளக்கொளியாலும் இதமாக இருக்கும்.

---

கூண்டுப்பறவை ஏன் பாடுகிறதென்று எனக்குத் தெரியும் - மாயா ஆஞ்சலு; தமிழில்: பெர்னார்ட் சந்திரா: விலை: ரூ. 390; Kalachuvadu Publications, 669 K.P. Road, Nagercoil-629001, Tamil Nadu - 629001, INDIA; Email: sales@kalachuvadu.com; Phone: +91 - 4652 - 278525

# தங்கலான்

## ஏன் முக்கியமான படம்?

**இளங்கோ**

மாய யதார்த்த / ஃபாண்டஸி திரைப்படங்கள் எத்தனையோ இருந்தாலும் அகிரா குரோசாவின் 'கனவுகள்', வூடி அலனின் 'பாரிஸில் நள்ளிரவு', கு(யி)லரமோ டெல் டோராவின் 'பானினுடைய பதிர்வட்டம்' போன்றவற்றை வெவ்வேறு பின்னணிக்காக உதாரணங்களாக எடுத்துக்கொள்வேன். அப்படி மாய யதார்த்தப் பாணியில் அமைந்த சல்மான் ருஷ்டியின் 'நள்ளிரவின் குழந்தைகள்' நாவல், திரையில் அதே வனப்புடன் வரையப்படவில்லை. இத்தனைக்கும் இதன் நெறியாளர் தீபா மேத்தாவுடன், ருஷ்டி திரைக்கதையில் இணைந்து பணியாற்றியுமிருந்தார். இவ்வாறு தனது நாவலுக்கு நிகழும் என்று கணித்தபடியால்தான், மார்க்குவெஸ் அவரின் 'தனிமையின் நூறு ஆண்டுகள்' நாவலைத் திரைப்படமாக்க கேட்டபோதும் 'முடியாது' என்று உறுதியாக மறுத்திருக்கின்றார். அவரின் 'காலராக் காலத்தில் காதல்' கற்பனை வளத்துடன் எடுக்கப்பட்டிருந்தாலும், நாவலின் உள்ளடுக்குகளை அது தவறவிட்டதாக ஓர் எண்ணம் எனக்கிருக்கிறது.

மலையாள சினிமா தன்னை ஒவ்வொரு காலகட்டத்துக்கும் புதுப்பித்துக் கொண்டிருக்கும். அதற்கான பார்வையாளர்களைத் தயார்படுத்தியபடி நெறியாளர்களும் புதிது புதிதாக வந்துகொண்டிருப்பார்கள். அண்மையில் ஒரு நேர்காணலில் ஃபாகத் பாஸில் 'இப்போது நாம் எல்லாவிதமான பரிசோதனைகளையும் செய்கின்ற காலம் மலையாளத்தில் கனிந்திருக்கின்றது. உங்களுக்குப் பிடித்த திரைப்படங்களை எடுங்கள்' என நண்பர்களுக்குச் சொன்னதாக கூறியிருப்பார். அதேசமயம், "ஒரு படம் நன்றாக வந்துவிட்டால், அதே சாயலில் மூன்று நான்கு எடுத்துவிட்டால், மலையாள ரசிகர்கள் நம்மை வீட்டுக்கு அனுப்பிவிடுவார்கள்" என பார்வதி ஓரிடத்தில் குறிப்பிட்டிருப்பார்.

ஆனால், தமிழிலோ புதிய சூழலுக்கு / புதிய கதைக்களன்களுக்கு பார்வையாளர்களைத் தயார்ப்படுத்தல்களே இல்லை. ஒரு திரைப்படம் தற்செயலாக வெற்றி பெற்றுவிட்டால், ஒரு பத்து படமாவது அதேபோல எடுத்து முதலில் வந்த நல்ல திரைப்படத்தின் அருமையே இல்லாமற் செய்துவிடுவார்கள். தொடர்ச்சியாக காதல் திரைப்படங்களை எடுத்துக் கொண்டிருந்த செல்வராகவன் சடுதியாக 'ஆயிரத்தில் ஒருவன்' படத்தில் திகைக்க வைத்தார். அன்றைய செல்வராகவனின் படங்கள் மீது விருப்பு வைத்திருந்த நான் 'ஆயிரத்தில் ஒருவனை' முதற்காட்சியாகப் பார்த்தபோது அது ஓர் அற்புதமான அனுபவமாக இருந்தது. அப்போது இத்திரைப்படம் குறித்து எதிர்மறையாக வைக்கப்பட்ட விமர்சனங்களை மறுத்து சிறு சிறு குறிப்புக்களாக நான் எழுதியதும் நினைவிலுண்டு. 'ஆயிரத்தில் ஒருவனின்' பிற்பாதி விளங்கவில்லை / சும்மா பாவனை செய்கின்றது என்றபோது அப்படியல்ல என்று விவாதித்திருக்கின்றேன். மேலும் ஈழத்தில் ஆயுதப் போராட்டம் முடிந்து ஒரு பெரும் வெறுமை சூழ்ந்திருந்தபோது, *2010*இல் வெளிவந்த அத்திரைப்படம் பலருக்கு ஒரு நம்பிக்கை வெளிச்சத்தையும் தந்திருந்தது. இப்போது கிட்டத்தட்ட *14* வருடங்கள் கடந்தபின், செல்வராகவனின் மற்றப் படங்களை விட, 'ஆயிரத்தில் ஒருவனே' அதிகம் சிலாகிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றது என்பது ஒரு முரண்நகை.

'தங்கலான்' பார்த்தபோதும் 'ஆயிரத்தில் ஒருவனை'ப் போல அது வெளிவந்த காலத்தில் தவறவிடப்பட்டு பின்னரான காலத்தில் அதிகம் உரையாடப்படுமென நினைத்துக்கொண்டேன். ஏனெனில் 'தங்கலானின்' கதைசொல்லல் பாணிக்கு இன்னும் தமிழ் பார்வையாளர்கள் தயார்ப்படுத்தவில்லை என்றே நினைக்கின்றேன். ஏன் பா.ரஞ்சித்தின் 'மெட்ராஸ்', 'காலா', 'சார்பட்டா பரம்பரை' போன்ற திரைப்படங்களைப் பார்த்துக் கொண்டாடிய ரசிகர்கள் கூட, ரஞ்சித் முற்றிலும் *360* கோணத்தில் திரைக்கதையை மாற்றியமைத்த 'தங்கலானை' அந்தளவுக்கு வரவேற்பார்களா என்பதும் உறுதியாகத் தெரியவில்லை.

'தங்கலான்' அதற்குரிய கதைசொல்லல் பலவீனங்களை, தொன்மங்களை எப்படி யதார்த்தத்தோடு இணைப்பதென்ற சிக்கல்களை / காட்சிப்படுத்தல்களை தன்னகத்தே கொண்டிருக்கின்றது என்பதை மறுக்கத் தேவையில்லை. அது ஒரு நெறியாளர், அதுவரையில்லாத புதுப்பாணியில் சொல்லவரும்போது வருகின்ற குழப்பங்கள் என எடுத்துக் கொள்ளலாம்.



இன்றைக்கு *90* வீதமான தமிழ்ச் சினிமா வன்முறை என்கின்ற 'ஆபாசத்தில்' சிக்கிச் சின்னபின்னமாகி அதுவே சமகாலத் தமிழ்ச் சினிமாவின் முகமாக கொள்ளப்படுகின்றபோது 'தங்கலான்' எத்தனையோ மடங்கு உயர்ந்த திரைப்படமாகும். கோலார் வயலுக்கு கொத்தடிமைகளாக குடும்பம் குடும்பமாக கூட்டிச்செல்லப்பட்டவர்களின் கதையை



ரஞ்சித்தால் யதார்த்தப் பாணி சினிமா மூலம் சொல்லமுடியாதா என்ன? ‘சார்பட்டா பரம்பரை’ அதற்கொரு மிகச் சிறந்த உதாரணமாக நம்முன்னால் இருக்கின்றது. அப்படியிருந்தும் இந்தக் கதையை ரஞ்சித் அவருக்குள் இருக்கும் கனவான மாய யதார்த்தப்பாணியில் சொல்ல முயன்றிருக்கின்றார். சிலஇடங்களில்தடுக்கியும்வீழ்ந்திருக்கின்றார். ஆனால், அதை மட்டும் முன்வைத்து இத்திரைப்படத்தை நிராகரித்தல் முறையாகாது. இத்திரைப்படத்தின் அரசியலும் அது காட்சிப்படுத்தப்பட்டு விதமும் நம்மை அத்திரைப்படத்தின் பாத்திரத்திரங்களின் ஒன்றாக எடுத்துச் சென்றதா இல்லையா எனத்தான் பார்ப்பவர்கள் முதல்கேள்வியாக எழுப்பிக் கொள்ளவேண்டும்.

நான் இத்திரைப்படத்தில் உள்நுழைந்தவனாக இருந்தேன். கோலார் தங்க வயலுக்குள் அழைத்துச் சென்றவர்களினூடாக தமிழகத்தில் இருந்து கூலித் தொழிலாளர்களாக / கொத்தடிமைகளாக எங்கோ தொலைவில் இருந்த ஜமேய்க்காவுக்கும் பிஜித்தீவுகளுக்கும் மொரிஸியஸிற்கும் அழைத்துச் செல்லப்பட்டவர்களின் துயரத்தை மட்டுமில்லை, காப்பிக்கும் / தேயிலைக்கும் ஆசைகாட்டி இலங்கைக்கும் / மலேசியாவுக்கும் அழைத்துச் சென்ற விளிம்புநிலை மனிதர்களின் வாழ்வியலைக் கண்டேன். ஏன் என்னைப் போன்றவர்களின், புலம்பெயர்ந்தவர்களின் வாழ்வின் தெறிப்பைக் கூட இதில் கண்டு சற்றுக் கலங்கியிருக்கின்றேன்.

அவர்களுக்கு வறுமையும் சாதி ஒடுக்குமுறையும் இவ்வாறான இடம்பெயர்தலுக்குக் காரணமெனில் எமக்கு போர் ஒரு முக்கிய காரணமாக இருந்தது. ஆனால், எல்லாப் புலம்பெயர்வுகளுக்கு அப்பால் அது எத்தகைய வாழ்வாக இருந்தாலும், சொந்த மண்ணை விட்டு வலுக்கட்டாயமாகப் பிரிவதென்பதுதான் எத்தகை துயரமானது.

அதனால்தான் தங்கலான் ‘எனது மண் எமது உரிமை’ என்று கடைசிவரை போராடுகின்றான். அதன்மூலமே தனது ஒடுக்குமுறைகளில் இருந்து விடுபடமுடியும் என்று உறுதியாக நம்பி, அதை மறுக்கும் எவராயினும் அவர்கள் நல்லவர்களாக இருந்தாலும், அவர்களுக்கு எதிராகப் போராடுவதில் தங்கலான் பின்னிற்பதில்லை. இறுதியில் அவன் அடைகின்ற புரிந்துணர்வும் / இலக்கும் தற்காலிகமாக இருந்தாலும், அதுவும் முக்கியமானதே.

இவ்வாறு பலரின் இடைவிடாத போராட்டங்களின் மூலந்தான் இன்று இந்த நிலைக்கு வந்து நாம் வாழ / சிந்திக்க முடிகின்றது. அத்துடன் எவ்வகையான ஒடுக்குமுறை என்றாலும் அதற்கு எதிராகக் குரல் கொடுக்க மட்டுமின்றி, நாம் ஒடுக்குமுறையாளராக மாறக்கூடிய ஒவ்வொரு தருணங்களிலும் நம்மை கவனமாக அவதானிக்கவும் இவ்வாறான படைப்புக்களே நம்மை உந்தித்தள்ளுகின்றன.

இளங்கோ <elanko@rogers.com>

# அருணாபாரதி கவிதைகள்

## 1. பதில்

இப்போதெல்லாம்
குண்டுகள் வெடித்து சிதறிய
அந்த மருத்துவமனை
அடிக்கடி நினைவிற்கு வருகிறது.
அப்பழுக்கற்ற எனது வீட்டுச்சுவர்களில்
அதன் சிதிலங்களை,
மகளின் மெல்லிய விரல்களை ஸ்பரிசிக்கையில்
கற்குவியல்களுக்கு நடுவே புதையுண்ட
ஒன்றுமறியா சிசுக்களின் கைகளை,
வலி நிவாரண மாத்திரை விழுங்கும்போது
அன்று பிரசவிக்கப் போவதில்லை என்றறியாமல்
அங்கே அனுமதிக்கப்பட்டிருந்த கர்ப்பிணிகள்
பிறப்பிற்கும் இறப்பிற்குமிடையே எழுப்பிய
ஓலத்தை,



இப்படி எண்ணிக் கொண்டிருக்கையில்
மனதில் ஒரு கேள்வி...
என்றேனும்
வரலாற்றுப் புத்தகத்தில்
இக்குரூரத்தைப் படித்துவிட்டு
'எதற்காக குழந்தைகளைக் கொன்றார்கள்?' என்று
மகள் கேட்டால்...
என்ன சொல்வது?
எல்லாமறிந்த கடவுளிடம் கேட்கலாம் என்றால்
யாரைக் கேட்பது?
கொன்றவர்களின் கடவுளையா?
கொல்லப்பட்டவர்களின் கடவுளையா?
பதில் தெரிந்த கடவுள்
யாராயிருந்தாலும் சரி!





## 2. சிறப்பு தரிசனம்

சாமியைப் பார்க்கலாமென்று
கோயிலுக்குப் போனேன்
வாசற்பலகையில் எழுதியிருந்தது
'சிறப்பு தரிசனம் நூறு ரூபாய்.'
வரிசையில் நிற்கையில் ஒரு குரல்
'ரொம்பவும் பசிக்குது
ஒரு டீ வாங்கி தர்றயா?' என்றது.
பையைத் துழாவினேன்
ஒற்றை நூறு ரூபாய் நோட்டு
'டீ வேணாம்
சாப்புடலாம் வர்றயா' என்றேன்.
'சாமி நீ நல்லா இருக்கணும்' என்று
கரங்கள் கூப்பி
வெள்ளைப் புன்னகை பூத்த
அவளுடன் சென்றேன்,
அன்று ஒரு நாளைக்கு
கோயிலுக்கு வெளியில் நின்றுகொண்டே
'சாமி' ஆன மகிழ்ச்சியில்!

## 3. பிளவு

ஒன்றாக நடந்த சாலைகள்
நேரம் போவது தெரியாமல்
நின்று கொண்டிருந்த
ஆற்றுப்பாலம்
ஒருவரை விடுத்து
மற்றவர் உண்ணாத
உணவு இடைவேளைகள்
ஓரிசைவாக மிதித்துச் சென்ற
சைக்கிள் பயணங்கள்
இவற்றிலெல்லாம்
சேர்ந்திருந்த நாம்
ஏன் வாழ்க்கையை மட்டும்

உனது எனது என
பிரித்துக்கொண்டோம்?

நேற்றிரவு
உன்னைப் பற்றிய
நினைவுகளை
அசைபோடாமலேயே
உறங்கிவிட்டேன்
நனவிலியில் கனவுகளாய் வந்து
அவை தலை மொய்க்க
நள்ளிரவில்
தூக்கம் கலைந்தது
இனி அவற்றைக் கொட்டித்தீர்க்க
காகிதம் ஒன்றே கதி!

தனிமையில்
விட்டுச் சென்றதாய் நினைத்து
வருந்த வேண்டாம்
தனிமையோடு தான்
விட்டுச் சென்றிருக்கிறாய்
அது
என்னை
மிகவும் பத்திரமாகவே
பார்த்துக்கொள்கிறது

பிரிந்து செல்கையில்
கேட்டாய்
'அவ்வளவு தானே
இனி வேறு ஏதும் இருக்கிறதா'
தூக்கு தண்டனைக் கைதியை
கடைசியாகக் கேட்பது போல

## 4. அரை நொடி

வேனிற்கால பகலும் வெயிலும் போல்
ஒன்றி இருக்கவில்லை
குளிர்ந்த இரவும் நிலவும் போலும் இல்லை
அதுவரை கோர்த்தபடி இருந்த
தம் விரல்களை
பிரிவதற்கு மனமின்றி
இருளும் ஒளியும்
போக வேண்டிய கட்டாயத்தில்
ஒவ்வொன்றாய் விரித்து
விலகிச்செல்லும்
அந்திப்பொழுது நாம்
அரை நொடியே சேர்ந்திருந்தோம் எனினும்
அது தானே நாம்!

அருணாபாரதி <aruna.ms1991@gmail.com>

(10ஆம் பக்கத் தொடர்ச்சி)

வெவ்வேறு பதிப்புகள் வந்திருந்தாலும், எதிலும் க.நா.சு. எழுதிய முன்னுரையைக் காணமுடியவில்லை.

புதுமைப்பித்தன் என்கிற மேதையின் தனிச்சிறப்பை ஆணித்தரமாக எடுத்துரைக்கும் இந்த முன்னுரையை 1987ஆம் ஆண்டு ஜனவரியில் எழுதியுள்ளார் க.நா.சு.. அதே ஆண்டில் புதுமைப்பித்தனுக்கு ஒரு கருத்தரங்கு நடத்தவேண்டும் என்று தொடர்ந்து முயன்று, தில்லியில் இரண்டு நாள் தேசியக் கருத்தரங்கு நடப்பதற்கும் வழிவகுத்திருக்கிறார். 'புதுமையும் பித்தமும்' முன்னுரையில் க.நா.சு. முன்வைத்த மதிப்பீடுகள், புதுமைப்பித்தனை முழுமையாக வாசித்த பின்பு எட்டிய முடிவுகள். அதன் செயல்வடிவம் போல நடந்தேறியதுதான் புதுமைப்பித்தன் நினைவுக் கருத்தரங்கு. இந்தக் கருத்தரங்க உரையிலும் 'புதுமையும் பித்தமும்' கட்டுரையில் இருக்கும் அதே ஆத்மார்த்தமான குரல் ஒலிக்கிறது.

இங்கே இன்னொரு செய்தியையும் கவனத்தில் கொள்ளவேண்டும். எண்பதுகளின் இறுதியில் சாகித்ய அகாடமி ஆங்கிலத்தில் இந்திய இலக்கியத்துக்கான கலைக்களஞ்சியத்தை (Encyclopaedia for Indian Literature) வெளியிட்டது. நான்காவது தொகுதியில் இடம்பெற்றிருக்கும் புதுமைப்பித்தன் பற்றிய கட்டுரையை எழுதியவர் க.நா.சு.. இந்தக் கலைக்களஞ்சியக் கட்டுரையையும் ஏறத்தாழ 1987ஆம் ஆண்டை ஒட்டியே எழுதியிருக்கிறார். 'புதுமையும் பித்தமும்' முன்னுரையிலும் தில்லி கருத்தரங்கிலும் விவரித்த புதுமைப்பித்தனின் மேதைமையை இந்தக் கலைக்களஞ்சியப் பதிவிலும் சற்று சுருக்கமாக சாராம்சப்படுத்திக் கூறியிருக்கிறார்.

இக்கட்டுரையில் சுட்டிக்காட்டப்பட்டவை 1987ஆம் ஆண்டிலும் அதை ஒட்டியும் நிகழ்ந்தவை மட்டுமே. இதையெல்லாம் க.நா.சு. தனது அந்திம காலத்தில், 75 வயதிலும் குன்றாத ஊக்கத்துடன் தனக்கேயுரிய வேகத்துடன் சாதித்திருக்கிறார். இதற்கு சில ஆண்டுகள் முன்பு வெளியான 'இலக்கிய சாதனையாளர்கள்' (1985) நினைவுக் கட்டுரைகளின் தொகுப்பில் 'புதுமைப்பித்தன் என்று ஒரு மேதை' என்ற தலைப்பில் கட்டுரையை எழுதியிருக்கிறார் என்பதையும் கவனிக்க வேண்டும்.

க.நா.சு., புதுமைப்பித்தனின் தனிச்சிறப்பைப் புரிந்துகொள்ளவும் ஏற்கவும் இல்லை என்று கூறிவந்த தொ.மு.சி. ரகுநாதன் 'கணக்கு விமர்சனம்', 'ஒப்புதல் வாக்குமூலம்' என எழுதியவற்றை இன்று வாசிக்கும்போது வேடிக்கையாக இருக்கிறது. ரகுநாதன் காணத் தவறியதை அவருக்கு அடுத்த தலைமுறையில் தோன்றிய ராஜ் கௌதமன் சரியாகச் சுட்டிக்காட்டிவிட்டார். விமர்சனத்துக்கு விமர்சனம் விமர்சனமல்ல என்ற எண்ணம் கொண்ட க.நா.சு. என்றுமே தன்மீதான விமர்சனங்களைப் பெரிதாகப் பொருட்படுத்தியதில்லை. ஆனால், க.நா.சு. தன் எழுத்தாலும் செயலாலும் சொல்லாமல் சொல்லிச் சென்ற செய்தி இன்னும் கேட்டுக்கொண்டிருக்கிறது.

ஸ்ரீநிவாச கோபாலன் <sharetosrini@gmail.com>

# தூறல் சாரல் அடைமழை

கே.எஸ். சுதாகர்
ஓவியம்: கிறிஸ்டி நல்லெரத்தினம்

மதுமதி, அம்மன் கோவிலுக்குப் போவதற்காக, வீட்டிற்கு முன்னால் இருந்த பேருந்து தரிப்பிடத்தில் நின்றாள். காலை இளவெயில் கண்ணுக்கு எதிர்த்தாற்போல் இருந்து எறித்தது. வசந்தகாலம் வருவதற்கு அறிகுறியாக மெல்பேர்ண் மரங்கள் எல்லாம் துளிர்த்து அழகழகாக ஜொலித்தன. மரம் செடி கொடிகள் என்றால் பச்சை நிறம் தான் என்பது பொய்த்துப் போயிருந்தது. இரசிக்கும் நிலையில் அவள் உடல் நிலை இல்லை. வீறு கொண்ட மருந்துகள் அவள் உடலின் சக்தியை உறுஞ்சிவிட்டன.

பேருந்தில் ஏறி இரண்டாவது தரிப்பிடத்தில் இறங்கிக் கொண்டாள். மெல்பேர்ண் பேருந்துகளில் அதிகமாக சனம் இருப்பதில்லை. சாதாரண வேளைகளில் என்றால், இறங்கிய இடத்திலிருந்து கோவிலுக்கு நடந்து செல்வதற்குப் பத்து நிமிடங்கள் போதும். ஆனால், இப்போது?

சில மாதங்களாக உடம்பின் மூட்டுகளில் பொல்லாத வலி கண்டிருந்தது. நடப்பதற்கோ வேலை செய்வதற்கோ உடம்பைச் சரித்துப் படுப்பதற்கோ முடியவில்லை. மசாஜ் செய்தால் சரிவரும் என்று சொல்லி, குடியிருக்கும் நகரின் மத்தியில் இருக்கும் பிரபலமான மசாஜ் சென்ரருக்குக் கூட்டிச் சென்றான் காண்டீபன்.

மதுமதி, காண்டீபனை மணம் முடித்து ஏழு வருடங்கள் கழிந்துவிட்டன. திருமணம் முடிந்த சில தினங்களில் அவனைச் சரியாக அடையாளம் கண்டுகொண்டாள் மதுமதி. அவனது பேச்சும் சரியில்லை, நடத்தையும் சரியில்லை. சரியான சுடுதண்ணி அவன். நைனி அவர்களின் பெண் குழந்தை. இரண்டாம் வகுப்புப் படிக்கின்றாள். முதலில் குழந்தை வேண்டாம் என்றுதான் சொல்லியிருந்தான் காண்டீபன். அவளைத் தொடாமலே `மலடி' என்றும் பழித்தான். உயிர் உருவாகுவதற்கு தான் தான் நூறுசத விகிதம் பொறுப்பு என்பதுமாப்போல ஏதோ தன்னால்தான் அந்த வரத்தைக் குடுத்துவிட முடியும் என பின்னர் மனமிரங்கிக் கொண்டான்



"உனக்கு மசாஜ் செய்யுறதைப் பாக்க எனக்கும் ஆசையாக் கிடக்கு." சொல்லிக்கொண்டே அருகே இருந்த படுக்கையில் வீழ்ந்துவிட்டான் காண்டீபன். மசாஜ் செய்வதைப் பார்த்து ஆசைப்பட்டானோ அல்லது அங்கே நின்ற பெண்ணைப் பார்த்து ஆசைப்பட்டானோ என மறுகினாள் மதுமதி. மசாஜ் செய்யும்போது மதுமதிக்கு உடம்பைச் சுண்டி இழுக்கும். பச்சை பச்சையாக நோகும். அவள் கத்திக் குளறுவாள். அருகே படுத்துக் கிடக்கும் காண்டீபன் "மசாஜ் சுப்பர்... நல்லாயிருக்கு... நல்லாயிருக்கு" என மசாஜ் செய்யும் பெண்ணை உற்சாகமூட்டுவான்.

மசாஜ் செய்ததில் மதுமதியின் உடல்நிலை முன்னேற்றம் காணவில்லை. குடும்ப வைத்தியர் `ஆர்த்தரிட்டீஸ்' என்று சொல்லி அதற்கான நிபுணரிடம் அனுப்பி வைத்தார். றூமற்றோலஜிஸ்ற் அவளுக்கு சில மருந்துகளுடன் பிஷியோ செய்யும்படி சொன்னார். அதன் பிறகு காண்டீபன் மதுமதியை பிஷியோவிற்கு கூட்டிச் சென்று விட்டுவிட்டு, தான் மசாஜ் செய்யப் போய்விடுவான்.

மதுமதி, கோவிலுக்கு வந்து சேர, இன்று இருபத்தைந்துநிமிடங்கள் பிடித்தன. படிக்கட்டில் அவளது நண்பி கலா, சுவாமி தரிசனம் முடித்து இளைப்பாறிக் கொண்டிருந்தாள். காதில் பூ, நெற்றியில் குங்குமம் என மங்களகரமாக இருந்தாள் அவள். ஆடை கூட பீச் கலரில் அவளுக்கு எடுப்பாக இருந்தது.

"மதி... இப்ப உடம்பு எப்பிடி இருக்கு?"

"அதே மாதிரித்தான் கலா. இரவு கூட ஒரே வலி. நித்திரை கொள்ளக்கூட முடியல்ல."

"சரி... நீ இப்பதான் வந்தனி. சுவாமியைக் கும்பிட்டிட்டு வா. நான் போகேக்கை உன்னைக் கூட்டிக் கொண்டு போய் வீட்டிலை விடுறன். அவசரப்படாதை..."

“உனக்கேன் சிரமம். நீ போ. வேலைக்கும் போகவேணும் தானே!”

“என்ரை கிளினிக்... நான் எப்ப போனாத்தான் என்ன. இன்னும் இரண்டு டென்ரிஸ்ற் வேலை செய்யினம் தானே. பிரச்சினையில்லை. நான் கூட்டிக் கொண்டுபோய் விடுவன்.” கலா, மதுமதியை முறைத்துப் பார்த்தாள். இனி கலாவுடன் கதைத்துப் பிரயோசனம் இல்லை என்ற முடிவுடன், சுவாமி தரிசனத்துக்காகக் கோயிலுக்குள் நுழைந்தாள் மதுமதி. கலாவும் மதுமதியைப் போலத்தான், ஒரே நேரத்தில் இந்த நாட்டுக்குள் அடியெடுத்து வைத்தவள். இன்று படிப்படியாக முன்னேறி ஒரு டென்ரல் கிளினிக் கூட வைச்சிருக்கின்றாள்.

தனக்காக கலா காத்து நிற்கின்றாளே என்ற நினைப்பில் வேகமாக நடக்கப் பார்த்தாள் மதுமதி. முடியவில்லை. தரிசனம் முடிந்ததும் மதுமதியை ஆதரவாகத் தாங்கிப் பிடித்து, கார் நிற்குமிடம் கூட்டிச் சென்றாள் கலா. காரினுள் ஏறுவதற்கும் உதவி செய்தாள். மதுமதிக்குக் கண்கள் கலங்கிவிட்டன.

“பிஷியோவுக்கு ஒழுங்காப் போய் வாறனி தானே!”

“எங்கை கலா... தனக்கு நேரமில்லை எண்டு இப்ப மூண்டு கிழமையாக் காண்டீபன் கூட்டிப்போறேல்லை. நான் கோயிலுக்கு வந்தே மூண்டுமாதமாப் போச்சு. ஒருக்காக் கடவுளிட்டை முறையிடுவோமெண்டு இண்டைக்கு வந்தனான்.”

“இப்ப பிஷியோவுக்கு நான் கூட்டிப் போகட்டுமா?”

“நீ உன்ரை பிள்ளையோடை, நைனியையும் பள்ளிக்கூடம் கூட்டிக் கொண்டுபோய் கூட்டிக்கொண்டு வாறாய். அந்த உதவியே எனக்குப் போதும்.”

“எப்பிடி நைனி? படிக்கிறாள் தானே!”

“அவள் படிப்பிலை படு சுட்டி.”

“நீ எனது உற்ற நண்பி. என்னாலை எதையும் மறைக்க முடியேல்லை. காண்டீபன் மீது ஒரு கண் வைத்துக் கொள்.”

“ஏன்? ஏன்?”

“கொஞ்சம் கவனமாக இரு எண்டு சொல்லுறன். இரண்டொரு தடவை மசாஜ் சென்ரரிலை வேலை செய்யிற சைனீஸ் பெட்டையைக் காண்டீபன் காரிலை ஏத்திக்கொண்டு போனதைக் கண்டனான்...”

மணம்முடித்தநாள்முதல்,சென்ற்அல்பன்ஸ்நகரின் ஒதுக்குப்புறத்தில் இருக்கும் சிவப்புவிளக்குப் பகுதியில், காண்டீபன் இரவு வேளைகளில் மினைக்கெடுவதாக சாடைமாடையாக கேள்விப்பட்டிருந்தாள் மதுமதி. இப்ப வெளிப்படையாக. ஆற்று மணலை எண்ணினாலும் எண்ணலாம், அருச்சுனன் மனைவியரை எண்ண முடியாதல்லவா?

`ஓகோ... அப்பிடியா சங்கதி. என்னை பிஷியோவிற்கு விட்டிட்டு, தான் மசாஜ் சென்ரருக்குப் போனது உதுக்குத்தானோ?' மனதுக்குள் நினைத்தபடி மௌனமானாள் மதுமதி. கார் அவளின் வீட்டுக்கு முன்னால் நின்றது.

“கலா... எனக்கொரு உதவி வேண்டும். இண்டைக்கு மாத்திரம் நைனியை உன் வீட்டில் வைத்திருப்பாயா?”

“ஏன்... வீட்டிலை சூரசம்ஹாரம் நடக்கப்போகுதோ? பாத்துக் கவனமாக நடத்து...”

“நைனிக்கு ஒருநாள் எண்டாலும் அதிதியோடை நைற் அவுற் நிக்கவேணும் எண்டு ஆசை. இண்டைக்குத்தான் அவளுக்கும் சரிவந்திருக்கு. ஸ்கூல் விட்டு வீட்டை கூட்டிக்கொண்டு வரேக்கை, உடுப்பு சாப்பாடு எல்லாம் எடுத்துத் தாறன். நைனியையும் ஒருக்கா கேட்கவேணும் தானே!”

“ஏன் என்னாலை சாப்பாடு குடுக்க முடியாதோ? வெள்ளிக்கிழமை எண்டபடியாலை பிரச்சினை இல்லை. நீ அவளை விடு. நான் பாத்துக் கொள்ளுறன். இரண்டுபேரும் விளையாடட்டும்.”

கலா புறப்பட்டுச் சென்றதும், வீட்டின் கதவுகள் ஜன்னல்கள் அனைத்தையும் அடித்துச் சாத்தினாள் மதுமதி. வெளிச்சத்தைப் பார்க்க அவள் கண்கள் கூசின. புழுக்கம் தாளாமல் அங்குமிங்குமாக வீட்டிற்குள் நடந்தாள். நடக்க முடியவில்லை. கால்கள் விண்ணென்று வலித்தன.

நைனிக்கு, கலாவின் மகள் அதிதியின் வீட்டிற்குச் சென்று ஒருநாளேனும் தங்குவதற்கு ஆசை. ஆனால், அம்மாவை இந்த நிலையில் விட்டுப் போக அவளுக்குப் பிரியமில்லை. அம்மாவுக்கு இயலாமல் வந்ததன் பிற்பாடு, நைனி குட்டி போட்ட பூனை போல அம்மாவையே சுற்றிச் சுற்றி வரத் தொடங்கினாள். எங்கே அம்மா விழுந்துவிடுவாளோ என்ற பயம் நைனிக்கு.

“அம்மா... நீங்கள் சரியான பாவம்” என்பாள்.

படிப்பு சொல்லிக் குடுக்கும்போதும் இமைக்காமல் அம்மாவையே பார்த்தபடி இருப்பாள். பள்ளிவிட்டு வந்ததும் ஓடி ஓடி அம்மாவுக்கு உதவி செய்வாள். எதையும் குனிந்து எடுக்க விடமாட்டாள். சமையலின் போதும் பெரிய ஒத்தாசை புரிவாள்.

“அம்மா... எனக்கு அதிதியின் வீட்டுக்குப் போக கொள்ளை ஆசைதான். ஆனா இப்ப எனக்குப் போக விருப்பமில்லை.”

நைனியை கலாவுடன் அனுப்பி வைப்பதற்குள் பெரும்பாடாகிவிட்டது மதுமதிக்கு.

நைனி போனதும் வீட்டை உட்புறமாகத் தாழிட்டுக் கொண்டாள். இரவு உடுப்பை மாற்றிவிட்டுப் படுக்கை அறைக்குள் பொத்தென விழுந்தாள். கண்ணீர் ஆறாகப் பெருக்கெடுத்தது. `கடவுள் என்னை ஏன்



இப்படித்தண்டித்தார்?யாழ்ப்பாணத்தில்என்னுடைய குட்டிக் கிராமத்தில் என் போன்றவர்களுடன் சிரித்து விளையாடி பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தது அவருக்குப் பிடிக்கவில்லையா?' அவள் மனம் ஊர் நினைவுகளையிட்டுக் கவலை கொண்டது.

அவுஸ்திரேலியாவில் கலா என்ற சிநேகிதியைப் போல, ஊரில் அவளுக்கு ஜனனி இருந்தாள். ஜனனி கூட கலாவைப் போல இடையில் வந்த சிநேகிதிதான். நாட்டுப் பிரச்சினைகளால் இடம்பெயர்ந்து புதிய பள்ளிக்கூடத்தில் பதினொராம் வகுப்பில் இணைந்து கொண்டபோது, ஜனனி, மதுமதிக்குத் தோழியானாள். பாடசாலை சேர்ந்து இரண்டு மூன்று நாட்களாக மதுமதியை உற்றுப் பார்த்தபடி இருந்தாள் ஜனனி. பின்னர் ஒருநாள், "நாங்கள் இரண்டுபேரும் ஃபிரன்ஸ் ஆவோமா?" என்று சிரித்தபடியே கேட்டாள். மதுமதி வெட்கத்துடன், "ஆவோமே!" என்றாள். இரண்டுபேருமே அழகில் ஈடு இணையற்றவர்கள். ஜனனி, மதுமதியை விட இரண்டு மூன்று அங்குலங்கள் உயரத்திலும், மூன்று மாதங்கள் வயதிலும் பெரியவள். ஜனனிக்கு இரட்டைப் பின்னல் பிடிக்கும். மதுமதி `பாப் கட்' வெட்டி முன்னாலே `பாண்ட்' ஒன்று போட்டிருப்பாள். இரண்டுபேரும் சக மாணவர்களுடன் பழகுவதில் சற்று வேறுபாடு கொண்டவர்கள். மதுமதி பெண்களுடன் கதைக்கவே வெட்கப்படுபவள். ஒரு அப்பிராணி. ஜனனி எதிர்மாறாக எல்லோருடனும் சகஜமாகப் பழகுவாள். ஆண்களுடன் கூட சரிக்குச் சரி நிற்பாள்.

ஜனனியின் வீடு, மதுமதியின் வீட்டிற்கும் பள்ளிக்கூடத்திற்கும் இடையில் இருந்தது. இரும்புக் கேற்றும் சுற்று மதிலும் கொண்ட வளவிற்குள் பளிச்சென்று இருக்கும். பள்ளிக்குச் சேர்ந்தது முதல் மதுமதியை அவளது அப்பாதான் சைக்கிளில் ஏற்றி இறக்கி வந்தார். ஒருநாள் காலை மதுமதியின் வீட்டு வாசலில் சைக்கிள் பெல் சத்தம் கேட்டது. "அங்கிள்... இனிமேல் மதுவை நான் பள்ளிக்குக் கூட்டிக்கொண்டு போகட்டுமா?" என்று ஜனனி, மதுமதியின் அப்பாவிடம் கேட்க, அப்பாவுக்குப் பின்னால் நின்ற மதுமதி "உனக்கேன் சிரமம்" என்றாள். "சரி... சரி. ஏறு... ஏறு" என்று ஒற்றைப்பிடியில் நின்றுகொண்டாள் ஜனனி. அதுமுதற்கொண்டு, ஜனனியுடன் சைக்கிளில் பள்ளிக்குச் சென்று வந்தாள் மதுமதி. ஜனனி தனது வீட்டிலிருந்து மதுமதியின் வீட்டிற்கு வந்து அவளை ஏற்றிக்கொண்டு, பின் தனது வீட்டைக் கடந்து பாடசாலை செல்வாள்.

ஜனனிக்கு மதுமதியின் மீது கொள்ளை ஆசை. பாடசாலையில் மதுமதியுடன் கூட நடக்கும்போது சற்றே பின்னாலே விலகி நின்று அவளைப் பார்த்து ரசிப்பாள். பின் எட்டிக் கால்களை முன்வைத்து நடந்து, சரிக்குச் சமமாக வந்ததும் பக்கப்பாட்டில் தரிசிப்பாள். தலைமயிரைப் பிடித்து சரி செய்தவாறே, `உனக்கு இப்படி வெட்டினால் இன்னும் நல்லா இருக்கும்' என்று கையால் அபிநயம் செய்வாள். அவளின் செய்கைகள் சிலவேளைகளில் மதுமதிக்கு கூச்சத்தை உண்டுபண்ணும்.

ஜனனிக்கு ஒரு அண்ணன் அவளின் சாயலிலே இருந்தான். சரியான புத்தகப் பூச்சியான அவன் எந்த நேரமும் அறைக்குள் ஒழிந்து கிடப்பான். அவனுக்கு மனைவியாக்கி, தனக்கு அண்ணியாக்க நினைக்கின்றாள் என எண்ணிக்கொள்வாள் மதுமதி.

பாடசாலைக்குப் போகும் பாதையில், இடையில் வரும் ஏற்றத்தில், உன்னி உன்னிச் சைக்கிளை உழக்குவாள் ஜனனி. மதுமதிக்கு அவளைப் பார்க்கப் பாவமாக இருக்கும். ஒருநாள் பொறுக்கமாட்டாமல், “அதென்ன... நீர் மாத்திரம் தான் என்னை வைச்ச ஓடுவீரோ? நான் உம்மை வைச்சு ஓடக்கூடாதோ?” மதுமதி கேட்க, “எங்கையாவது புருஷனை வைச்சு பெஞ்சாதி சைக்கிள் ஓடுறதைக் கண்டிருக்கிறீரோ” என்று மறுத்தான் விட்டாள் ஜனனி.

“என்ன சொல்லுறாய்... எனக்கு ஒண்டுமே புரியேல்லை!”

“சுரக்காய்க்கு உப்பில்லையாம் எண்டிறன். நான் தானே உன்னைக் கலியாணம் செய்யப் போறன்.” ஜனனி சொல்ல, மதுமதி திகைப்புடன் சிரிப்பும் வந்தது.

“பெம்பிளையும் பெம்பிளயும் எங்காலும் கலியாணம் செய்வினமா?”

“நாங்கள் செய்வம்.”

மதுமதி சிரிப்பை அடக்கமுடியாமல் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்க, அவளைப் பார்த்து ஜனனியும் சிரிக்கத் தொடங்கினாள். சிரிப்பின் உச்சத்தில் சைக்கிள் தடுமாறி ஒரு பள்ளத்திற்குள் இறங்கி ஏற, மதுமதி சைக்கிள் கரியரில் இருந்து தொப்பென்று பத்தைக்குள் விழுந்தாள்.

அந்தச் சம்பவத்தை இருவரும் அடிக்கடி நினைத்துச் சிரித்துக் கொள்வார்கள்.

ஜனனிக்கு முதல் தடவையிலே பல்கலைக்கழக அனுமதி கிடைத்துக்கொண்டது. அப்போது அவளது அண்ணன் கொழும்பிலே தங்கியிருந்து பொறியியல் படித்துக் கொண்டிருந்தான். ஜனனியும் கொழும்பு சென்று தன் அண்ணனுடன் இணைந்துகொண்டாள்.

முதல் தடவை மதுமதிக்குப் பல்கலைக்கழகம் போய் படிப்பதற்குப் புள்ளிகள் காணாமலிருந்தது. இரண்டாம் தடவை பரீட்சைக்குத் தயார் செய்து கொண்டிருந்தாள். ரியூசனுக்குப் போய்விட்டு வந்திருந்த ஒரு காலைப்பொழுதில், அம்மா ஒரு படத்தைக் காட்டி, `உனக்குப் பிடித்திருக்கின்றதா?' என்றுகேட்டார். திருமணம் பற்றி அவள் அப்பொழுது கனவிலும் நினைத்திருக்கவில்லை. `நாட்டிலை பிரச்சினைகள் கூடிக்கொண்டு வருது. நான் மடியிலை நெருப்பைக் கட்டிக் கொண்டிருக்கிறன். நல்ல சம்பந்தம். அவுஸ்திரேலியா போய் அங்கேயே படி.' முடிந்த முடிவாகிவிட்டது. நேரில் பழகி நடக்கின்ற திருமணங்களே முறிந்து போகின்ற நிலையில், படத்தைப் பார்த்து என்ன சொல்வது?

ஜனனி இருந்திருந்தாள் கடைசிவரை மதுமதியைத் திருமணம் செய்ய விட்டிருக்க மாட்டாள். “பத்தொன்பது வயசிலை உனக்கென்ன கலியாணம்” என்று சண்டை போட்டிருப்பாள்.

அடுத்தநாள் ரவுணில் இருந்த கொமியூனிக்கேசன் சென்ரருக்கு அப்பா மதுமதியைக் கூட்டிச் சென்றார். காண்டீபனுடன் பேசச் சொல்லி ரெலிபோன் பூத்திற்குள் தள்ளிவிட்டார். சில பெற்றோர்கள் தம் பெண் பிள்ளைகளை, அவர்களுக்கு உலகம் என்னவென்று பிடிபடும் முன்னரே ஆண்களின் கைகளில் தள்ளிவிடுகின்றார்கள். மதுமதிக்கும் அதுதான் நடந்தது.

“எனக்குத் தொடர்ந்து படிக்க வேணும்.”

“அதுக்கென்ன! உனக்கு என்னென்ன விருப்பமோ அதை எல்லாம் செய்யும் சுதந்திரம் இஞ்சை இருக்கும்.”

“வேலைக்குப் போக வேணும்.”

“இஞ்சை இரண்டுபேரும் வேலை செய்தாத்தான் சீவியத்தைக் கொண்டிழுக்கலாம்.”

“எனக்கு நல்லா சமைக்கத் தெரியாது!”

“அதுக்கென்ன... நான் நல்லாச் சமைப்பேனே!”

எத்தனையோ ஆசைகளை அழித்துவிட்டு, தனக்கென்று ஒருவருமேயில்லாத அவுஸ்திரேலியா நாட்டிற்குள், காண்டீபனை மாத்திரம் நம்பி அடியெடுத்து வைத்தாள் மதுமதி. அப்புறம், “படிக்கப் போக வேண்டும்” என்றாள். உதட்டுக்குள் சிரித்தான். “வேலைக்குப் போக வேண்டும்” என்றாள். மூச்சுக்கூட விட முடியாதபடி வேலை வாங்கும் ஒரு பிளாஸ்ரிக் கொம்பனியில் சேர்த்து விட்டான். அங்கே காண்டீபனைப் பற்றிய பல கதைகள் அவளுக்காகக் காத்துக் கிடந்தன. கதைகளுக்கான விளக்கத்தைக் காண்டீபனிடம் கேட்டபோது, “உனக்கு வேலை வேண்டாம்” என்று அதையும் தடுத்துவிட்டான்.

கோவிலுக்கு மாத்திரம் கூட்டிச் செல்வான். அங்கேயும் யாருடனும் அவள் கதைத்துவிட்டால் அவனுக்குப் பிடிக்காது. கடவுளிடம் மாத்திரம் தான் கதைக்க வேண்டும் என்பான். தான் மாத்திரம் உள்ள பெண்பிரசைகள் எல்லாருடனும் வழிந்து வழிந்து கதைப்பான். ஆண்களுடன் கதைத்து மதுமதி கண்டதில்லை. ஒரு தம்பதியினரைக் கண்டால்கூட, கணவனைத் தவிர்த்து அவன் மனைவியுடன் தான் அதிகம் கதைப்பான்.

படிக்க, வேலைக்குப் போகத் தடை, சினிமா பார்க்கத் தடை, கடைக்குப் போய் பொருட்கள் வாங்கவும் தடை. எதை அவள் பெரிதாக விரும்பவில்லையோ அதைச் செய்வதற்கு மாத்திரம் அனுமதித்தான். அதுவும் சாப்பிடும்போது அதைப்பற்றியும் கிண்டல் செய்வான். ஆயிரத்தொரு



நொட்டைகள். ஆரம்பத்தில் சிறிது எதிர்ப்புத் தெரிவித்தாள். ஆனால், புரிந்துகொள்ள முடியாத பிரகிருதியின் முன்னால் ஒன்றும் எடுபடவில்லை.

காண்டீபன் எங்கே வேலை செய்கின்றான் என்று மதுமதி கேட்பதில்லை. ஆரம்பத்தில் கேட்டவள் தான். ஒருநாள் ஒருபதில் சொல்வான்.. இன்னொருநாள் இன்னொரு பதில்.

ஒருமுறை வேலை செய்தவிடத்தில், ஒரு பெண்ணுடன் அத்துமீறி நடந்து கொண்டதில் வேலையை இழந்திருந்தான். அந்தக் காலப்பகுதியில் தான் நைனிக்குப் பூசை விழுந்ததும், வீட்டிற்கும் பொலிஸ் வந்ததும் நிகழ்ந்தது.

ஒரு சனிக்கிழமை, நைனி கொம்பியூட்டர் கேம் விளையாடியதைப் பொறுக்கமாட்டாமல் தாறுக்குமாறாக அவளை அடித்துவிட்டான் காண்டீபன். நைனி வாய் காட்டிவிட்டு அம்மாவுடன் வந்து ஒட்டிக் கொண்டாள். அவளை மதுமதியிடம் இருந்து பிரித்து இழுத்துக் கொண்டு போன காண்டீபன், பழுக்கக் காய்ச்சிய கம்பியினால் அவளின் கையில் சூடு போட்டுவிட்டான். அன்று அவன் நிறைவெறியில் இருந்ததால் குழந்தையை ஏதேனும் செய்துவிடுவானோ எனப் பயந்தபடி இருந்தாள் மதுமதி. அன்று இரவு முழுவதும் `இந்த அப்பா எனக்கு வேண்டாம்' எனச் சிணுங்கியபடி இருந்தாள் நைனி.

"விருப்பம் இல்லாட்டி வீட்டை விட்டு இரண்டுபேரும் போகலாம்." கதவைத் திறந்து கத்திவிட்டுப் போனான் காண்டீபன். தொண்டை வெடித்ததில் நைனி பயந்துவிட்டாள்.

"நாங்கள் ஏன் வீட்டை விட்டுப் போகவேணும். நான் உங்களைச் சட்ட ரீதியாக திருமணம் செய்திருக்கின்றேன். இந்த வீட்டில் எனக்கும் பங்குண்டு." மதுமதியும் திருப்பிக் கத்தினாள். கொஞ்சம் காட்டமாக அவள் சத்தம் போட, கதவைத் திறந்து மதுமதியின் கன்னத்தில் ஒன்று போட்டான்.

மறுநாள் நைனி பாடசாலை போனதும், எதுவுமே நடக்காதது போலப் பொச்சுப் பொச்சென்று மதுமதியைக் கொஞ்சினான். `உன்னிலை மதியும் இருக்கு... மதுவும் இருக்கு' என்றான்.

பள்ளிக்கூடத்தில் ரீச்சரிடம் நைனி பிடிபட்டுக் கொண்டாள். பொலிஸ் வீட்டிற்கு வந்து காண்டீபனை எச்சரிக்கை செய்துவிட்டுப் போனது. அதன் பின்னர் சில நாட்கள் காண்டீபனுடன் கதைக்காமல் இருந்தாள் மதுமதி.

தன் வாழ்நாளில் அதிர்ந்து பேசி அறியாத மதுமதியை, ஏழு வருடங்களாக மிருகமாக நடத்தினான். நார் நாராய் அவள் உடலைக் கிழித்துக் கொண்டான்.

இரவு எட்டு மணி. வீட்டு வாசலில் நின்று பெல்லை அழுத்தினான் காண்டீபன். சத்தமில்லாது போக, "இந்த நேரத்திலை எங்கை போச்சுது இந்தச் சனியன், பிள்ளையையும் கூட்டிக் கொண்டு" திட்டியவாறே ரெலிபோனில் மதுமதியை அழைத்துப் பார்த்தான். மதுமதியின் ரெலிபோன் செயல் இழந்திருந்தது. தன்னுடைய திறப்பினால் கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்றான். படுக்கை அறைக்குள் சென்றபோது கட்டிலில் மதுமதி படுத்திருந்தது கண்டு திகைத்துப் போனான். வந்த வேகத்தில் அவளின் உடலைத் திருப்பி, நெற்றியைத் தொட்டுப் பார்த்தான்.

"யார் நீ? இஞ்சை ஏன் வந்தாய்? திறந்த வீட்டுக்குள்ளை நாய் நுழையிற மாதிரி."

அவளின் பேச்சில் மாறுதல் கண்டு, அவளைக் கட்டிப் பிடித்துக் கொஞ்சினான் காண்டீபன்.

"சீ... போ! தள்ளிப் போ... மசாஜ் செய்யிற பெட்டையைப் போய்க் கொஞ்சு."

மதுமதியின் உதட்டில் இருந்து அனல் மூச்சுக் கிழம்பியது. காண்டீபன் ஏதோவெல்லாம் சமாதானங்கள் சொல்லிப் பார்த்தான். எதுவும் எடுபடவில்லை.

"உனக்குக் கலா தான் பொய் பொய்யாய் எல்லாம் சொல்லியிருக்கிறாள். அவளை நம்பாதே! இனிமேல் அவளுடன் நீ கதைக்கக் கூடாது. சொல்லிப்போட்டன். எங்கே நைனி?"

"உன்னோடை ஒரு பெம்பிளப்பிள்ளை வீட்டிலை இருக்க முடியுமா?" சீறினாள் மதுமதி.

நைனியை வீடு முழுவதும் தேடினான். கலாவிற்கு ரெலிபோன் செய்து, நைனி அங்கு வந்திருக்கின்றாளா எனக் கேட்டான். அவள் வரவில்லை என்று சொல்லிவிடவே, குசினிக்குள் அமர்ந்து யோசித்தான். இன்று இவள் என்ன வித்தியாசமாகவே இருக்கின்றாளே? நிஜமாகவே பைத்தியம் பிடித்துவிட்டதா? சாது மிரண்டால் காடு கொள்ளாது என்பார்களே! எப்படிச்

சமாதானம் கொள்ளலாம் என்று யோசித்தான். தனது உடுப்புகளை மாற்றிவிட்டு, வெறும் சாரத்துடன் படுக்கை அறைக்குள் வந்தான். பளிங்குச் சிலையொன்று, இரவு உடுப்புகளுடன் கட்டிலில் அவனுக்காகவே காத்திருப்பது போல் உணர்ந்தான். அவளைப் பலாத்காரமாக பின்புறம் அணைத்துக் கொண்டு கட்டிலில் சரிந்தான். மதுமதி சீறிக்கொண்டு கட்டிலில் இருந்து எழுந்தாள். முழுசிப் பார்த்தாள். மொட்டந்தலை பளிச்சிட்டது. அதில் ஒன்றிரண்டு மயிர்கள் நின்று குதித்துக் கூத்தாடின. வயிறு சிறுசிறு மடிப்புகளாகத் தொங்க,நெஞ்செல்லாம் புசுபுவென்ற மயிர்க்கற்றைகளுடன் ஒரு பண்டிக்குட்டி போலத் தோன்றினான் காண்டீபன்.

காளி நடனம் தொடங்கியது. மதுமதி கால்களை அகல எட்டி வைத்து வீட்டிற்குள் துள்ளித்துள்ளி நடந்தாள். உதட்டிலிருந்து வார்த்தைகள் பிசிறிப் பிசிறி தாறுக்கு மாறாக வந்தன. ஒவ்வொரு நடைக்கும் எதிர்த்தாற்போல் இருந்த குசினிச் சாமான்களைக் கீழே தட்டிவிட்டாள். காண்டீபன் கட்டிலில் இருந்தபடியே அவளை உற்றுப் பார்த்தான்.

“மதி... நான் சொல்லுறதைக் கேள். ஊரைக் கூட்டி ஒப்பாரி வைக்காதை. இரவு நேரம் பக்கத்துச் சனங்கள் எங்களைப் பற்றி என்ன நினைப்பினம்.”

மதுமதி அடங்கவில்லை. அவளின் சீற்றம் இயற்கையின் சீற்றத்தைவிட உச்சமாக இருந்தது.

“இவ்வளவு காலமும் ஆர்த்தரிட்டீஸ் எண்டு சொல்லி நடிச்சிருக்கிறாய் நீ. இப்ப நடக்கிறாய் தானே! களைச்சாப் போல உன்ரை நடனத்தை நிப்பாட்டு...”

“நான் உன்னைத் தொட்டுத் தாலி கட்டியிருக்கிறன். உன்னாலை ஒண்டுமே என்னைச் செய்ய முடியாது!”

காண்டீபன் கட்டிலின் நுனியில் இருந்து தனது மொபைல் போனை நோண்டத் தொடங்கினான்.

மதுமதி சுவாமி அறைக்குள் நுழைந்தாள். எல்லாப் படங்களையும் முறைத்து முறைத்துப் பார்த்தாள். எந்தப் பெண் தெய்வத்திற்காவது ஒன்றுக்கு மேற்பட்ட புருஷன்மார்கள் இருக்கினமா? முருகன், கிருஷ்ணர் முதற்கொண்டு எல்லாச் சுவாமிப் படங்களையும் ஓரமாகத் தள்ளிவிட்டு, அம்மனின் படத்தை நடுவில் வைத்தாள். “இனிமேல் இந்த வீட்டிலை எல்லாரும் அம்மனைத்தான் கும்பிட வேண்டும்.” பெருங்குரலெடுத்துக் கத்தினாள்.

“உனக்கென்ன பேய் பிடிச்சிட்டுதா? பொறு பொலிசைக் கூப்பிடுறன்.”

மதுமதி, காண்டீபனின் மிரட்டலுக்குப் பயப்படவில்லை. சுவாமி அறைக்குள்ளிருந்து வெளியே வந்த அவள், பாதங்களைத் தூக்கி அகட்டி அகட்டி வைத்து நடந்தாள். காண்டீபனின் காதுக்குள் ஏதோ ஒன்று கணீர் கணீர் எனக் கேட்டது. மதுமதியின் கணுக்கால்களைக் கவனித்தான். கழுத்திலே இருக்க வேண்டியது அவள் கால்களிலே இருந்தது. அது கால்கள் இரண்டுக்கும் இடையே `எட்டு'ப் போல் வளைந்து கிடந்தது. அது விரிவதும் சுருங்குவதுமாக அறுந்துவிடும் போல் இருந்தது. ஒவ்வொரு எட்டி வைப்பிற்கும் அது மொசைக் தரையின் மேல் மோதி ஓசை எழுப்பியது.

சிறிது நேரத்தில் எல்லாம் அடங்கிவிட, ஒரு கதிரையைத் தூக்கிவந்து படுக்கை அறைக்குள் காண்டீபனுக்கு முன்னால் போட்டாள். அவள் மூச்சு இன்னமும் கேத்தல் சத்தம் போல் சீறிக் கொண்டிருந்தது. காண்டீபனுக்கு அவளின் கோலத்தைப் பார்க்கச் சிரிப்பு வந்தது. ஒற்றைக் கண்ணால் அவளைப் பார்த்தபடி இருந்தான். மதுமதியின் கண்கள் லேசர் ஒளிவீச்சுப் போல் அவனின் கண்களைக் குத்தின.

சற்று நேரத்தில் எழுந்து ரொயிலற் நோக்கிச் சென்றாள். திரும்பி வந்தபோது அவள் கையில் ஒரு வாளி தொங்கியது. காண்டீபனின் தலை மேல் அந்த வாளியைக் கவிழ்த்து மூடினாள். நாற்றமடிக்கும் திரவம் அவன் தலைமேல் அருவியாகக் கொட்டி, தேகமெல்லாம் பரவியது. காண்டீபனின் மூக்கு, கரடியின் மூக்கு போல் சுருங்கி, சிங்கத்தினுடையதைப் போல் விரிந்தது.

“சீக்' என்றபடியே கட்டிலில் இருந்து எழும்பி ஓடத் தொடங்கினான். வாளி நிலத்தில் விழுந்து இரவின் அமைதியைக் குலைத்தது. அவனுக்கு அந்த நேரத்தில் எங்கு ஓடுவதென்று பிடிபடவில்லை. துண்டைக் காணோம் துணியைக் காணேம் என வெறும் மேலுடன் வீட்டின் கதவைத் திறந்து வெளியே ஓடத் தொடங்கினான். கார் நிற்குமிடம் போன அவன், திறப்புக் கோர்வையையும் மொபைல்போனையும் வீட்டில் விட்டுவிட்டதை உணர்ந்தான்.

`காட்டு விலங்கை வீட்டில வைச்சிருந்தா இந்தக் கதிதான்' மேசையில் இருந்த கத்தியைத் தூக்கியபடி, அவனைப் பின்னாலே கலைத்துச் சென்றாள் மதுமதி. கார் தரிப்பிடத்தில் ஏதோ ஒரு மிருகமொன்று உறுமுவது போன்ற சத்தம் அவளுக்குக் கேட்டது. வெளியே வந்து பார்த்தபோது காண்டீபனை அங்கே காணவில்லை. கராஜ் முன்னால் அவனது டாம்பீகமான கார் நின்றது. காரைச் சுற்றி ஓடி நான்கு ரயர்களையும் தாறுமாறாகக் குத்திக் கிழித்தாள். `கிலிலிமிகிவி' என்று எழுதியிருந்த இலக்கத்தகட்டிற்குள் கத்தியைச் சொருகி பிடுங்கி எடுத்தாள். வீட்டை உள்புறமாக மீண்டும் பூட்டிவிட்டு, சுவாமி அறைக்குள் சென்ற அவள் அம்மனின் படத்தின் கீழ் அந்த இலக்கத் தகட்டை வைத்தாள். `கிலிலி மி கிவி'.

வீட்டின் எல்லா விளக்குகளையும் தாராளமா எரியவிட்டாள். இரவு உணவைச் சாப்பிட்டுவிட்டு அன்றைய மருந்துகளைப் போட்டுக் கொண்டாள்.

உடம்பு விண்விண்ணென்று வலிக்க தொப்பென்று படுக்கையில் விழுந்தாள்.

நாக்கைப் பிடுங்கிக் கொள்ளும் வகையில் காண்டீபனை நாலு கேட்க வேண்டுமென்றுதான் மதுமதி நினைத்திருந்தாள். ஆனால், இப்படி விபரீதமாகும் என்று அவள் நினைக்கவில்லை.

`நான் இப்படியெல்லாம் நடந்து கொள்ளக்கூடிய பெண் அல்லவே! இந்த நாடகத்தை நடத்தி வைத்தது எதுவாக இருக்கலாம்?' தன்னையும் அறியாமல் பீடித்திருக்கும் நோயின் உக்கிரம் தான் காரணம் என்பதைப் புரிந்துகொண்டாள் மதுமதி. அதையிட்டு வெட்கமும் கொண்டாள். ஒரு அடி எடுத்து வைப்பதற்குள் ஓராயிரம் வேதனைகள் கொள்ளும்போது, அவருக்கு உடலின்பம் தேவைப்படுகின்றது!

மதுமதிக்கு யாருடனாவது கதைத்தால் ஆறுதலாக இருக்கும் என்று தோன்றியது. அவளுக்கு இப்போது இரண்டே இரண்டு உற்ற சிநேகிதிகள் தான் இருந்தார்கள். ஒருத்தி அருகினில், இன்னொருத்தி தொலை தூரத்தில். நேரம் இரவு பதினொன்றைத் தாண்டிவிட்டது. கலாவுடன் இனிக் கதைக்க முடியாது. ஜனனிக்கு எடுத்துச் சொன்னால், “இனி என்ன செய்யுறதடி... அட்ஜட்ஸ் பண்ணி வாழப் பார்” என்பாள். கடந்த ஐந்து வருடங்களாக அவள் இதைத்தான் சொல்லி வருகின்றாள். அவளும் இன்னமும் திருமணம் செய்யவில்லை. படித்துப் படித்து முன்னேறி ஏணிப்படிகளில் செல்கின்றாள். அவள் அண்ணா திருமணம் முடித்து இரண்டு பிள்ளைகளுடன் வாழுகின்றான். அவளுக்கு தன் அண்ணனை தான் திருமணம் செய்யவில்லை என்ற கவலை இருப்பதாக மதுமதி உணர்கின்றாள். மதுமதிக்கும் அந்தக் குற்றவுணர்வு உண்டு. இலங்கை நேரத்தைப் பார்த்தாள். மாலை ஏழு மணி.

“எனக்கு என்ரை கணவரைப் பிடிக்கேலை. துரத்திப் போட்டன். விவாகரத்து எடுக்கப் போறன்” என்றாள் மதுமதி. மறுமுனையில் சிறிது நேரம் சத்தமில்லை.

“என்ன ஜனனி... நான் சொல்லுறன். நீ பேசாமல் இருக்கின்றாய்?”

ஜனனி பின்பும் மௌனமாகவே இருந்தாள். எதையோ ஆழமாகச் சிந்தித்தாள். பிறகு “உம்” கொட்டினாள். “எனக்கு எந்தவொரு ஆணையுமே பிடிக்கேல்லை, மது” என்றாள்.

“நான் அடிக்கடி என்ரை பிரச்சினைகளைப் பற்றி உனக்குச் சொல்லச் சொல்ல, உனக்கு அப்பிடி வந்திட்டுது போல...”

“இல்லை மது.... எனக்குக் கலியாணம் செய்யவே பிடிக்கேல்லை...”

“ஜனனி... எல்லா ஆண்களும் அப்பிடியில்லைத்தானே!”

“சரி மது.... நீ உறுதியா முடிவு எடுத்திட்டியா?”

“எதைப் பற்றி?”

“காண்டீபனை விவாகரத்துச் செய்யுறதைப் பற்றி...”

“அதிலை எந்த மாற்றமும் இல்லை...”

“அப்பிடியெண்டா... நான் ஒண்டு கேட்பன். முந்திச் சைக்கிளிலை சிரிச்சு பத்தைக்குள்ளை விழுந்த மாதிரி சிரிக்கக்கூடாது...”

“நான் கூட அடிக்கடி அதை நினைச்சுப் பாப்பன் ஜனனி. நீ பள்ளிக்கூடச் சீருடை எண்டதையும் பாக்காமல், என்ரை நெத்தியிலை வடிஞ்ச ரத்தத்தை உன்ரை சீருடையாலை துடைச்சு விட்டாயே! அந்தத் தழும்பு கூட இப்பவும் என்ரை நெற்றியிலை இருக்கு...”

“அப்ப நீயும் நானும் ஏன் ஒருத்தருக்கொருத்தர் துணையா இருக்கக்கூடாது?” மதுமதி கதைத்துக் கொண்டிருக்கும்போது திடீரெனக் கேட்டாள் ஜனனி.

“எனக்கு என்ன சொல்லுறதெண்டே தெரியேல்லை ஜனனி. நான் இப்ப நோய் பிடிச்சு பட்டுக்கொண்டிருக்கிற ஒரு மரம்...”

“ஆருக்குத்தான் வருத்தம் இல்லை. அதெல்லாம் ஒரு பொருட்டேயில்லை.”

“இல்லை... நைனியோடையும் ஒருக்காக் கதைச்சிட்டு...”

“அவளோடை என்ன கதை... அவளுக்கு இப்ப இதைப்பற்றி அறியாத வயசு... தெரிய வாறபோது தெரியட்டும்.”

“அப்ப சரி” என்றாள் மதுமதி.

“சரி வைக்கிறன்” என்றாள் ஜனனி.

நைனி படுக்கும் இடத்தைத் தடவிப் பார்த்தாள். இன்று தனிமை. நாளை நைனி வந்துவிடுவாள்.

நைனி இல்லாதது கூட நல்லதுக்குத்தான் என நினைத்தாள். இல்லாவிட்டால் ஆண் வர்க்கத்தையே அவள் தவறாக எடை போட்டுவிடக்கூடும். பிஞ்சு மனத்தில் பதியும் எதுவுமே ஆழமானவை. அவளின் வாழ்க்கையாவது நல்லபடியாக இருக்க வேண்டும். அவள் படிக்க வேண்டும். நைனியைப் பற்றிய கனவுகளுடன் மதுமதி உறங்கிவிட்டாள்.

நள்ளிரவில் எழுந்து, கதவை நீக்கி வெளியே எட்டிப் பார்த்தாள். இருளில் பாம்பு ஒன்று வெளியேறிப் போனது போல ரூ வீட்டிலிருந்து பிரதான வீதிக்குச் செல்லும் பாதை இருந்தது. ஒழுங்கையும் பிரதான வீதியும் சந்திக்கும் புள்ளியில் புதிதாக ஒரு தெருவிளக்கு அட்டகாசமாக வெளிச்சம் போட்டுக்கொண்டிருந்தது.

கே.எஸ். சுதாகர் <kssutha@hotmail.com>

### தருமமிகு சென்னை - 11

# வெள்ளாள தேனாம்பேட்டையிலிருந்து...

**சந்தியா நடராஜன்**

தேனாம்பேட்டை என்ற இடம் எனக்கு அறிமுகமானது *1978*இல் வெளிவந்த 'சிட்டுக்குருவி' திரைப்படம் மூலம்தான். கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது வெளிவந்த படம். அது சென்னையில் சிவப்பு கலர் பஸ் ஓடிய காலம். அத்தகைய பஸ்ஸில் ஒரு பாடல் காட்சி எடுத்திருப்பார்கள். 'என் கண்மணி என் காதலி' எனத் தொடங்கும் பாடலை அண்ணா சாலையில் ஓடிக்கொண்டிருக்கும் பஸ்ஸில் கதாநாயகியுடன் நடிகர் சிவகுமார் பாடத் தொடங்குவார். அந்தப் பாடலின் நடுவே, 'தேனாம்பேட்டை சூப்பர் மார்க்கெட் இறங்கு' என்று கண்டக்டரின் குரல் கேட்கும்.

சென்னைக்கு வந்த பிறகுதான் தேனாம் பேட்டையானது வெள்ளாள தேனாம்பேட்டை, வன்னியர் தேனாம்பேட்டை என இரு பகுதிகளைக் கொண்டது என்று தெரிய வந்தது. தெருக்களின் பெயர்களில் மாநகராட்சி சாதிகளை ஒழித்துவிட்ட போதிலும் வெள்ளாள தேனாம்பேட்டையில் உள்ள வணிக நிறுவனங்களின் பெயர்ப் பலகைகளில் வெள்ளாள தேனாம்பேட்டை என்ற பெயர் நீங்காமல் நிலைத்து நிற்கிறது. இந்தப் பகுதி, வேளாளர்கள் - குறிப்பாக முதலியார்கள் வசம் இருந்திருக்கிறது.

சென்னை அண்ணாசாலையில் இருந்த புகழ்பெற்ற அபட்ஸ்பரி திருமண மாளிகைகூட ஒரு காலத்தில் லோகநாத முதலியார் வசம் இருந்திருக்கிறது. லோகு, லோகநாதன் ஆகிய பெயர்கள் சென்னைக்கே உரித்தான பெயர்கள் போலும். திரு.வி.க.வின் சகோதரரின் பெயர்கூட லோகநாதன்தான். அபட்ஸ்பரியின் உரிமையாளராக இருந்த லோகநாத முதலியார் ஒரு தொழிலதிபராக இருந்திருக்கிறார். ஒரு காலத்தில் அபட்ஸ்பரி, சத்ய சாய்பாபா அறக்கட்டளைக்குக் கொடையாக வந்து சேர்ந்திருக்கிறது. அபட்ஸ்பரியில் ஒரு திருமணம் நடைபெற்றால் அது சென்னையின் பிரமுகர் ஒருவர் வீட்டுத் திருமணமாகவே இருக்க முடியும். எனக்குத் தெரிந்தவர்களில் சிகரம் செந்தில்நாதன் அபட்ஸ்பரியில் நடந்த நிகழ்வு ஒன்றில் கலந்துகொண்டதாகக் கூறியிருக்கிறார். இராஜாஜி தொடங்கி, அண்ணா, கலைஞர், எம்ஜிஆர் என்று முன்னாள் முதல்வர்களின் காலடி பதிந்த இடம்.



வெள்ளைக்காரன் வாழ்ந்த அபட்ஸ்பரி மாளிகை. அபட்ஸ்பரி திருமண அரங்கம், ஏவிஎம் ராஜேஸ்வரி திருமண மண்டபத்தைவிட அளவில் பெரியதெனக் கூறப்படுகிறது.

*1990*களில் அபட்ஸ்பரி, சத்ய சாய்பாபா அறக் கட்டளையிலிருந்து ஆந்திர மாநில பாராளுமன்ற உறுப்பினரான சுப்பராம ரெட்டியிடம் கைமாறி யிருக்கிறது. அவர்தான் பாலாஜி குழும நிறுவனங்களின் அதிபர். மிகப்பெரிய சாராய ஆலைகளின் உரிமையாளர். சுப்பராம ரெட்டி *1995*இல் நக்ஸலைட்டுகளால் கொலை செய்யப்பட்டார். அவரது நிறுவனங்களின் நிதிநிலை சரிந்ததும் அவர் சம்பந்தப்பட்ட நிதிநிறுவனங்களும் ஆட்டம் கண்டன. அவரது மறைவால் முற்றிலும் உருக்குலைந்த நிறுவனம் இராயப்பேடை பெனிபிட் பண்ட். பிறகு சுப்பராம ரெட்டியின் சகோதரர் ஸ்ரீநிவாசரெட்டி குடும்ப நிறுவனங்களுக்குப் பொறுப்பேற்றார். அபட்ஸ்பரி மாளிகை இருந்த இடத்தில் ஐந்து நட்சத்திர ஹோட்டல் உருவாக்கப் போடப்பட்ட திட்டங்கள், முன்னெடுப்புகள் எதுவும் முழுமையடையவில்லை. அந்த இடத்தில் எழுந்த கட்டிடம் பாதியிலேயே பரிதாபமாக நின்றுபோனது. அந்த இடத்தைக் கடக்கும் சென்னைவாசிகள் எல்லோரும் அந்த அரைகுறைக் கட்டிடத்தின் அவலம் கண்டு மனம் நொந்து போவார்கள்.

சுப்பராம ரெட்டியும் அவரது சகோதரரும், எனது குடும்ப நண்பர், இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் நிர்வாக இயக்குநரின் நேர்முக உதவியாளராகப் பணியாற்றிய சந்திரசேகருடன் நெருங்கிப் பழகியவர்கள். அவர் மூலம்தான் அபட்ஸ்பரியின் அவல நிலையை நான் அறிய நேர்ந்தது. எப்படியோ *2011*ஆம் ஆண்டு 'ஹயத் ரெசிடென்ஸி' என்ற ஐந்து நட்சத்திர ஹோட்டல் உதயமாயிற்று. அதன் ஒரு பகுதியில் ரமீ மால் இயங்கி வருகிறது. துபாயில் பல ஹோட்டல்களை நிர்வகித்து வரும் மங்களூர்காரர் அதன் உரிமையாளர் ஆனார். அந்த வணிக வளாகத்தின் தொடக்க விழாவுக்கு எனது நண்பர் சந்திரசேகர் ஐஓபி நிர்வாகஇயக்குநர் நரேந்திராவுடன் சென்றிருக்கிறார். கவிஞர் தமிழ் பிரபாவின் திருமணமும் இந்த ஹோல்ட்டலில்தான் நடைபெற்றது.

தற்போது அமர்ஜோதி லாட்ஜ்,




சிந்தாமணி சூப்பர் மார்க்கெட், திமுகவின் தலைமையிடமான அண்ணா அறிவாலயம், ஹயத் ரெசிடென்ஸி ஹோட்டல், ரிசர்வ் பேங்க் பயிற்சிப் பள்ளி. டிஎம்எஸ் வளாகம் எல்லாம் தேனாம்பேட்டைக்கு அண்ணாசாலையை எல்லையாகக் கொண்டு வரிசைகட்டி நிற்கின்றன. தமிழக அரசியலின் நாடித்துடிப்பாக இயங்கும் அண்ணா அறிவாலயம், தேனாம்பேட்டையின் அரசியல் முகமாக இருவர்ணக் கொடியசைய அதிர்ந்துகொண்டே இருக்கிறது.

இந்த இடங்களைக் கடந்து வலதுபுறம் செல்லும் சாலைக்குச் சிவசங்கரன் சாலை என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள். இந்தச் சாலை கதீட்ரல் சாலைக்குச் செல்லும் குறுக்கு வழி. சிவசங்கரன் சாலையில் பிரதானமாக இருக்கும் முதல் பங்களா முன்னாள் தலைமைச் செயலர் ஜி.சொக்கலிங்கம் ஐ.ஏ.எஸ் அவர்களது இல்லம். இப்பகுதி சொக்கலிங்கம் நகர் என்று அழைக்கப்படுகிறது. அண்ணாவின் தலைமைச் செயலர் பெயரில் வழங்கும் இப்பகுதியில்தான் கலைஞரின் அன்புக்குரிய நேர்முகச் செயலாளர் ஷண்முகநாதன் வீடும் உள்ளது. சொக்கலிங்கம் பங்களா வருவதற்குமுன் அண்ணாசாலையிலிருந்து வரும் இப்பாதை அடைத்து வைக்கப்பட்டிருந்தது. அந்த இடம் தனியார் சொத்தாகவே இருந்திருக்கிறது. சிவசங்கரன் சாலை வளைந்து சென்று எல்லையம்மன் காலனி பிரதான சாலையைத் தொடுகிறது. வழியில் சிவசங்கரன் அடுக்ககம் ஒன்று உள்ளது. இங்கு தமிழ்நாடு மாநில திட்டக்குழு துணைத்தலைவராகப் பணியாற்றிய நாகநாதன், அவரது மகனும் இன்றைய சட்டமன்ற உறுப்பினருமான எழிலன் ஆகியோர் தங்கள் வாழ்விடங்களைக் கொண்டுள்ளனர். எல்லையம்மன் சாலைக்கு ஆறு குறுக்குத் தெருக்கள் உள்ளன. அவை யாவும் முட்டுச் சந்துகள். அவை சிவசங்கரன் தோட்டத்து மதில் சுவருடன் முட்டி முடிவடைகின்றன. விநாயகர் கோவில் இருக்கும் 5ஆவது குறுக்குச் சந்தில்தான் விஜயகுமார் - மஞ்சுளா தம்பதியினர் வாழ்ந்தனர். பாரதிராஜா எல்லையம்மன் காலனி பிரதான சாலையில் வாழ்ந்தவர்.

எல்லையம்மன் காலனி குறுக்குத் தெருக்கள் முடிவடையும் மதில்சுவருக்கும் சிவசங்கரன் சாலைக்கும் இடைப்பட்ட பகுதிதான் சென்ற நூற்றாண்டின் ‘சிவசங்கரன் தோட்டம்’ என்ற மாபெரும் தென்னந்தோப்பு. பழம் தரும் மரங்களும் பச்சைப் பசேலென்ற விளைநிலங்களும் இருந்துள்ளன. தென்னை மரங்கள் நிறைந்த தென்னம்பேட்டைதான் தேனாம்பேட்டை ஆனது என்று ஒரு கதை நிலவுகிறது.

*அதுசரி, யார் இந்தச் சிவசங்கரன்?*

சிவசங்கரன் தொண்டைமண்டல முலியார் வகுப்பைச் சேர்ந்தவர். இவரது சகோதரர் அப்பாதுரை முதலியார். அப்பாதுரை முதலியாருக்குரிய

தோட்டம்தான் விற்பனைக்கு வந்து சொக்கலிங்க நகரானது. சிவசங்கர முதலியார் தமிழ்த்தென்றல் திரு.வி.க.வின் வகுப்புத் தோழர். சிவசங்கரனைக் குறித்தும் சிவசங்கரன் தோட்டம் குறித்தும் தனது சுயசரிதை நூலான 'திருவிக வாழ்க்கைக் குறிப்புகள்' என்ற நூலில் திருவிக பதிவு செய்துள்ளார். அது வருமாறு:

*தேனாம்பேட்டையிலே ஒரு பெரிய தென்னந்தோப்பு உண்டு. அது சிவசங்கர முதலியாருடையது. அதில் சில மாமரங்களும் இருந்தன... ஒவ்வொருபோது எங்கள் கூட்டம் அட்லன் தோட்டத்துக்குள் புகும்; புகுந்ததும் நாங்கள் வானர சேனைகள் ஆவோம் என்று கூறும் அளவில் நின்றுவிடுகிறேன். அட்லன் தோட்டத்துப் பல பொருள்கள் இராயப்பேட்டைக்கு விருந்தாவன. அவைகளுள் ஒன்று சிறந்தது. அது பருங்களாக்காய்.*

கதிரைவேற் பிள்ளை மீது இராமலிங்க சுவாமிகள் ஜார்ஜ் டவுன் மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் ஒரு வழக்குத் தொடர்ந்திருந்தார். திருவிகவும் சிவசங்கரன் முதலியாரும் தமது தமிழாசான் மீது கொண்ட அன்பால், வழக்கு விசாரணைக்கு வரும்போதெல்லாம் நீதிமன்றத்திற்குச் செல்வதுண்டு. இத்தனைக்கும், "கதிரைவேல் மதவாதப் பேய். அப்பேய் உன்னையும் பிடித்துக்கொள்ளும். படிப்பு பாழாகும். நீ மாணாக்கன்" என்று ஆசிரியர்கள் சிலர் திருவிகவை எச்சரித்திருந்தனர். இந்த வழக்கு மட்டுமின்றி வில்வபதிச் செட்டியார் என்பவர் தம்மைக் கதிரைவேற் பிள்ளை தாக்கியதாக எழும்பூர் மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் தொடுத்திருந்த வழக்கும் விசாரணைக்கு வந்திருந்தது. இந்த வழக்கால் திருவிக தேர்வு எழுத முடியாமல் போய் அவரது பள்ளிப்படிப்பு முடிவடைந்தது. இந்த வழக்கில் திருவிகவும் சிவசங்கரனும் அவர்களுக்கு அளிக்கப்பட்ட சம்மன் பேரில் நீதிமன்றத்தில் ஆஜராகி சான்றளித்தனர். பரீட்சை எழுதவேண்டிய திருவிக கதிரைவேற்பிள்ளை மீது கொண்டிருந்த அன்பால் தேர்வு எழுதாமல் நீதிமன்றத்தில் கிடந்தார்.

சிவசங்கரனும் திருவிகவும் பள்ளி மாணவர்களாயிருந்தபோதுதான் டிடிகே சாலையும் லாயிட்ஸ் சாலையும் இணையும் இடத்தில் ஸ்ரீ பாலசுப்ரமணிய பக்தஜன சபை உருவானது. கதிரைவேற்பிள்ளை தலைவராக இருந்த இந்த சபையில் சிவசங்கரனும் பொறுப்பு வகித்திருக்கிறார். சிவசங்கரனின் மருமகன் கிருஷ்ணசாமியும் இத்திருச்சபையில் தொண்டாற்றியிருக்கிறார்.

சிவகாமி அம்மாள் சிவசங்கரனின் மனைவி. சிவசங்கர முதலியாருக்கு ஒரே வாரிசு அவரது மகள் சுசீலா. அவரது கணவர்தான் கிருஷ்ணசாமி.

கிருஷ்ணசாமியின் மூத்த மகள் துளசி. துளசியின் கணவர் ஷண்முகம் ஆன்மிக நாட்டம் கொண்டவர். மலேசியாவில் வாழ்ந்த முகமது யூசுப் என்பவரிடம் தீட்சை பெற்றவர். முகமது யூசுப், பசுபதி சிவாச்சாரியார் என்று தனது பெயரை மாற்றிக்கொண்டு சைவரானவர். 'ஷண்முகம் பிணி தீர்க்கும் ஆற்றல் பெற்றவர்' என்கிறார் சிவசங்கரன் குடும்பத்து உறவினரான சிவஞானம். இவர் ஷண்முகத்தைக் குருவாக ஏற்றுக்கொண்டவர். ஷண்முகம் கிண்டி ஐஐடி-யில் உதவி முதல்வர் பொறுப்பு வகித்து 1996இல் ஓய்வு பெற்றவர். துளசி ஷண்முகம், எஸ்.ஐ.ஈ.டி கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர். இவரை நன்கு அறிந்தவர் சென்னை ஆழ்வார் திருநகரியில் வசித்துவரும் தமிழ்ப் பேராசிரியர் சாந்தமூர்த்தி. திருவிகவின் பெயரை நொடிக்கு ஒரு தரம் உச்சரிப்பவர் சாந்தமூர்த்தி. இவரும் வெள்ளாள தேனாம்பேட்டையில் 13 ஆண்டுகள் வாழ்ந்தவர்.

கிருஷ்ணசாமியின் இளைய மகள் சந்திரா. அவரது கணவர் ச.த. காசிநாதன். இருவரும் எல்லையம்மன் காலனி பிரதான சாலையின் ஒரு கோடியில் பல கோடி மதிப்புள்ள 'அருள் இல்லம்' என்ற மாளிகையில் வசித்து வந்தனர். காசிநாதன் மெட்ராஸ் பார் கவுன்சிலில் பதிவுபெற்ற வழக்கறிஞர். ஆனால், கணவன், மனைவி இருவருமே தற்போது உயிருடன் இல்லை. அமெரிக்காவில் வாழ்ந்து வந்த இவர்கள் மகள் தற்போது அருள் இல்லத்தில் குடியேறி இருக்கிறார். அதேபோல துளசி ஷண்முகத்தின் மகள் பவானியும் சென்னையில் வசிக்கிறார்.

கிருஷ்ணசாமிக்கு சற்குணம் என்ற ஒரே மகன். ஸ்டேட் பேங்க்கில் காசாளராகப் பணியாற்றியவர். தற்போது மேற்கு மாம்பலத்தில் வசித்து வருவதாகத் தகவல்.

சிவசங்கரனின் பூர்விகம் இராயப்பெட்டை. ஆனால், அவர் வெள்ளாள தேனாம்பேட்டை முத்தையா முதலித் தெருவில் சிவசங்கரன் தோட்டத்துக்கு அருகில் வாழ்ந்து வந்திருக்கிறார். 96 வயது வரையில் பெருவாழ்வு வாழ்ந்திருக்கிறார். சிவசங்கரன் குடும்பத்துக்கு நெருங்கிய உறவினரான சிவஞானம், சிவசங்கரன் குடும்ப உறவுகளைக் குறித்த தகவல்களை விரிவாகப் பேசினார். சிவஞானம், ஏ.ஜி. அலுவலகத்தில் சிபிடபிள்யூடி துறையின் போர்மேனாகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். அவரது தொடர்பு கிடைத்ததே ஒரு நல்ல அனுபவம்.

'இன்று சதுப்பு நிலங்களில்கூட அத்துமீறி அடுக்குமாடிகள் வந்துவிட்டன. ஏரிகள் தூர்க்கப்பட்டுவிட்டன' என்று சென்னைப் பெருவெள்ளத்தின்போது நகரமே புகார்ப் புராணம் எழுதிக் கொண்டிருந்தது அல்லவா! சென்னையின் ஒரு பகுதியில் மட்டும் எத்தனை தோட்டங்கள் இருந்தன என்று பட்டியல் போடுகிறார் திருவிக தனது சுயசரிதையில்:



திருவிக

*இராயப்பேட்டை தோட்டங்களுக்குப் பேர் பெற்றது. அம்மையப்ப முதலி வீதி முனையிலுள்ள ஒரு சிறு சந்தில் நுழைந்து சென்றால் வேல் முதலியார் தோட்டம், மாசிலாமணி முதலியார் தோட்டம், அப்பாசாமி முதலியார் தோட்டம், முனிசாமி முதலியார் தோட்டம், அய்யாசாமி முதலியார் தோட்டம், செருக்காத்தம்மாள் தோட்டம், அரங்கநாத முதலியார் தோட்டம், திவான் சாயப் தோட்டம், மன்னாத முதலியார் தோட்டம், பூங்காவன முதலியார் தோட்டம், தேப்பெருமாள் முதலியார் தோட்டம், திருப்பளிமுதலியார்தோட்டம் (திரும்பினால்) சலவன் தோட்டம், பச்சையப்ப முதலியார் தோட்டம், மாங்காட்டு முதலியார் தோட்டம், செந்தாமரை முதலியார் தோட்டம், மூலத் தோட்டம், கன்னித் தோட்டம் போய்த் திரும்பிக் கோலக்காரன் தோட்ட வழியே புகுந்து மீண்டும் அம்மையப்ப முதலி தெருவை அடையலாம். இத்தோட்டப் பரப்பை என்னவென்று சொல்வேன்?*

இவையெல்லாம் 1953இல் மறைந்த திருவிகவின் பதிவுகள். இதன் மூலம் காலமெல்லாம் நகரப்படலம் எழுத வேண்டியதன் அவசியத்தை நாம் அறிவோமாக!

87 வயதிலும் வாசிப்பில் ஆர்வம் குன்றாதவர் எஸ்.கே. சாந்தமூர்த்தி. அவரிடம் பேசிக் கொண்டிருக்கும்போது வெள்ளாள தேனாம்பேட்டையில் பல ஆண்டுகளாக ‘சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்’ ஒன்று இயங்கி வந்ததாகக் கூறினார். வள்ளலார் பக்தர்கள் நிறையப் பேர் இருந்தார்களாம். அந்த இடத்தைக் காணும்பொருட்டு எல்லையம்மன் காலனிக்குச் சென்றிருந்தேன். அந்த காலனியின் ஒரு கோடியில் நாகாத்தம்மன் கோயிலுக்கு எதிரே வசித்து வந்த என்னுடன் பணியாற்றிய கே.எஸ். அசோகனைச் சந்தித்தேன். அசோகன் ஒரு மலையாளி. அவரது தந்தை ‘ஹரீஷ் விநோத் டீ ஸ்டால்’ என்ற பெயரில் அங்கேயே ஒரு கடை நடத்தி வந்தார். இது தவிர அண்ணா மேம்பாலம் இறக்கத்திற்குப் பக்கத்தில் காமராஜர் அரங்கத்திற்கு எதிர்ப்புறம் ‘ஹோட்டல் ஸ்ரீ அசோக்’ என்ற உண்வகமும் நடத்தி வந்தார். அவர் மறைந்து ஒரு வருடம் ஆகிவிட்டது.

அசோகனுடன் முத்தையா முதலி தெரு வழியே நடந்து சென்று விவி கோயில் தெருவில் புகுந்தோம். இந்த இரண்டு தெருக்களும் சந்திக்கும் இடத்தில் ஒரு விநாயகர் கோயில் உள்ளது. 1960களில் திராவிட கழகத்தினர் இந்தப் பிள்ளையாரைப் பெயர்த்தெடுத்து உடைக்க முற்பட்டார்களாம். ஆனால், தெருவாசிகள் ஒன்றுகூடி அந்த நாத்திகர்களை விரட்டியடித்தார்களாம். தற்போது விநாயகர் பத்திரமாக இருக்கிறார்.

விவி கோயில் தெருவில் ஸ்ரீ வெங்கடேச பெருமாள் கோயிலுக்கான நுழைவு வளைவு ஒன்றுள்ளது. வளைவைக் கடந்தால் வரும் ஒரு தெருவில் அந்தப் பெருமாள் கோயில் உள்ளது. நாங்கள் அங்கு சென்றபோது கட்டுமான வேலைகள் நடந்து கொண்டிருந்தன. பெருமாள் கோயில் இந்து அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் உள்ளது. கோயில் முன் பகுதியில் ஒரு நூறு சதுர அடி அளவிலான அறை ஒன்று உள்ளது. அதுதான் வள்ளலார் வழிபாடு நடைபெறும் இடமென்று கட்டுமானப் பணியில் ஈடுபட்டிருந்த ஜோதி மேஸ்திரி கூறினார்.

வள்ளலார் வழிபாடு குறித்து அவரிடம் கேட்டபோது ஜோதி எங்களை முத்தையா முதலி தெருவில் வசிக்கும் ஜெயச்சந்திரன் என்பவரிடம் ஆற்றுப்படுத்தினார். ஜெயச்சந்திரன் மூலம் சிவஞானத்தின் தொடர்பு கிடைத்தது. ஜெயச்சந்திரன் ஒரு தீவிர வள்ளலார் பக்தர். வடலூருக்குப் பாதயாத்திரை செல்பவர். தற்போது தேனாம்பேட்டை சன்மார்க்க சங்கத்தை முபா என்கிற பாலசுப்பிரமணியம் என்பவர் நிர்வகித்து வருகிறார்.

சிவஞானம் இந்த சன்மார்க்க சங்கம் குறித்து விரிவாகப் பேசினார். வெங்கடேச பெருமாள் கோயில் ஆரம்பத்தில், அதாவது 1945இல் ஒரு பஜனை மடமாகவே இருந்திருக்கிறது. அது யாதவர்களின் இடம். கோவிந்தராஜ் என்ற வன்னிய சமூகத்தைச் சார்ந்தவர்தான் வள்ளலார் வழிபாட்டைத்

தொடங்கியிருக்கிறார். கோவிந்தராஜின் அத்தை வள்ளலாரின் பக்தை. வடலூரிலேயே வாழ்ந்திருக்கிறார். 1867இல் வள்ளலாரின் திருமுறைகள் அச்சு வடிவம் பெற்று நூலாக வெளியானபோது, அந்நூலின் ஒரு பிரதியை அந்த அம்மாளுக்கு வள்ளலார் வழங்கியிருக்கிறார். தனது மறைவுக்கு முன் அத்தை அப்பிரதியைக் கோவிந்தராஜிடம் கொடுத்திருக்கிறார். அத்தையின் வள்ளலார் பக்தி இவரிடம் ஏற்படுத்திய தாக்கத்தில்தான் தேனாம்பேட்டை ஸ்ரீ வெங்கடேச பெருமாள் கோயில் முன்பகுதியில் வள்ளலார் எழுந்தருளினார்.

வள்ளலார் வழிபாடு தொடங்குவதற்குமுன் ஊரார் அனைவரின் ஒப்புதல் பெறப்பட்டிருக்கிறது. யாரும் ஆட்சேபிக்கவில்லை. வள்ளலாரின் பஞ்சலோகச் சிலையைத் தாக்கூர் என்கிற ராஜஸ்தான்காரர் ஒருவர் அளித்திருக்கிறார். நித்ய வழிபாடும் நித்ய அபிஷேகமும் தொடர்ந்து நடந்து வந்திருக்கிறது. வள்ளலாரின் படத்தை அளித்தவர் பிராட்வேயில் வெல்லமண்டி வைத்திருந்த ஒருவர். சிவஞானம் சிறுவயதில் ஸ்ரீ வெங்கடேச பெருமாள் கோயிலுக்குச் செல்லும்போது அவரது தாய், 'முக்காடு சாமி பக்கம் திரும்பாம வா' என்று சொல்வாராம். வள்ளலாரை முக்காடு சாமி என்று அந்தப் பகுதி மக்கள் அழைத்திருக்கிறார்கள். தற்போது வள்ளலார் வழிபாட்டுத் தலம் புதுப்பிக்கப்பட்டு வருகிறது. தை மாதத்தில் பூசைகள் தொடங்கும்.

வேளச்சேரியில் சிதம்பரசாமி என்ற மகானின் சமாதி இருக்கிறது. சிதம்பரசாமி கோயில் என்கிறார்கள் பொதுமக்கள். சிதம்பர சாமி எழுதிய 'அட்டாங்க யோகம்' என்ற நூலை மீள்பதிப்புச் செய்திருக்கிறார் சிவஞானம். வள்ளலாரையும் பாம்பன் சாமியையும் வணங்கும் சிவஞானத்திற்கு அவர்கள் குருவோ தெய்வமோ இல்லை. இருவரையும், 'எங்கள் வீட்டுப் பெரியவர்கள்' என்கிறார் சிவஞானம்.

வேதாத்திரி மகரிஷி ஒரு நெசவாளர் குடும்பத்தில் கூடுவாஞ்சேரியில் பிறந்தவர். வறுமையில் உழன்று, நெசவுத் தொழிலில் வளர்ந்து வளம்பெற்று, பின்னர் எல்லாவற்றையும் துறந்தவர். அவரது அமைப்பில் இருப்பவர்கள், 'வாழ்க வளமுடன்' என ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்கிறார்கள். கடல் கடந்தும் 'வாழ்க வளமுடன்' வீசுகிறது. மகரிஷியின் உலக சமுதாய சேவா சங்கம் சொக்கலிங்க நகர் பகுதியில் சில காலம் செயல்பட்டதாகச் சொல்கிறார் பேராசிரியர் சாந்தமூர்த்தி. அதற்கான சான்றுகள் கிடைக்கவில்லை.

சிவஞானமும் கரிக்கோல்ராஜ் என்ற திரைப்பட நடிகரும் நண்பர்கள். கரிக்கோல்ராஜ் எம்ஜிஆரின் மதிப்புக்குரியவராகவும் அன்பில் திளைத்தவராகவும் வாழ்ந்திருக்கிறார். ஆனால், எம்ஜிஆர் முதலமைச்சராக இருந்தபோதுகூட தனக்கென்று எதுவும் செய்துகொண்டதில்லை. சிவகாசிக்காரரான கரிக்கோல், வள்ளலாரின் தீவிர பக்தர். தேனாம்பேட்டை சன்மார்க்க சங்கத்தில் ஈடுபாடு கொண்டவர். வள்லலார் விக்ரகத்தை வழிபட்டுச் செல்வார்.

ஒரு முறை வள்ளலார் சிலை முன்பு அமர்ந்து ஒரு பிராமணப் பெண் அழுதபடி இருந்திருக்கிறாள். தொடர்ந்து சில நாட்களாகவே வள்ளலர் சபைக்கு வந்த ராஜேஸ்வரி என்ற அந்தப் பெண் கணவனின் கொடுமைக்கு ஆளானவள். கணவனால் கைவிடப்பட்ட அந்தப் பெண்ணுக்கு ஆறுதல் சொல்லக்கூட ஆளில்லை. அவளை அணுகி அவளது நிலையைக் கண்டுகொண்டார் சிவஞானம். கரிக்கோல்ராஜிடம் அந்தப் பெண்ணுக்கு ஏதாவது உதவி செய்யும்படி கேட்டுக்கொண்டார். கரிக்கோல்ராஜ், ஆர்.எம். வீரப்பனைச் சந்தித்து, சமரச சன்மார்க்க சங்கத்திற்கு வரும் பெண் ஒருத்தி கணவனால் கைவிடப்பட்டவள் என்றும் அவளது வாழ்வாதாரத்திற்கு ஏதாவது உதவி செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். ஆர்.எம்.வீ அப்போதைய முதல்வரைச் சந்திக்க ஏற்பாடு செய்தார். குறித்த நாளில் கரிக்கோல்ராஜ், சிவஞானம், ராஜேஸ்வரி மூவரும் எம்ஜிஆரின் ராமாவரம் தோட்டத்திற்குச் சென்றிருக்கிறார்கள். அந்த அபலைப் பெண்ணின் கதையைக் கேட்ட எம்ஜிஆர் கணவனால் கைவிடப்பட்ட பெண்களுக்கு அரசு வேலை கிடைக்கும்படி ஓர் ஆணை பிறப்பிக்கச் செய்தார். அது நடந்த ஆண்டு 1983. ராஜேஸ்வரிக்குத் தமிழ்நாடு அரசு அச்சகத்தில் வேலை கிடைத்தது.

எம்ஜிஆர், கரிக்கோல்ராஜ் மீது அளவுகடந்த அன்பு பாராட்டியவர். கருணையுள்ளம் கொண்ட கரிக்கோல்ராஜ் ஒரு நாள் வள்ளலார் கோயிலுக்கு வந்தார். கொஞ்ச நாட்களாகவே அவரிடம் ஏதோ மாறுதல் தென்பட்டு வந்தது. அவர் கடைசியாக வந்து வள்ளலாரை வழிபட்டது ஒரு வியாழக்கிழமை. அதற்குப் பிறகு அவரை யாருமே பார்த்ததில்லை. அல்லும் பகலும் தேடினார்கள். அகப்படவே இல்லை கரிக்கோல்ராஜ்.

அது போலவே இன்னொரு ஆளுமையும் மாயமாய் மறைந்தார் சென்னை மாநகரில். அவர்தான் அண்ணாவின் அன்புத் தம்பியான மா.சு. சம்பந்தன் என்கிற எழுத்தாளர்; பதிப்பாளர்; இதழாசிரியர். அவர் எழுதிய நூல்களில் குறிப்பிடத்தக்கவை: 'அச்சுக்கலை', 'அச்சும் பதிப்பும்', 'தமிழ் இதழியல் வரலாறு'. அது மட்டுமா? அவரும் 'சென்னை மாநகர்' என்று சென்னையைப் பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறார்.

தொடரும்

சந்தியா நடராஜன்
<sandhyapathippagam@gmail.com>

# வெ.தமிழ்க்கனல் கவிதைகள்



## 1. ஆலமரத்து பஸ்டாப்

ஒரு நீண்ட விசில்
சத்தத்தைத் தொடர்ந்து
'ஆலமரத்து பஸ்டாப்பெல்லாம்
எந்திருச்சு வாங்க'
என்ற பேருந்து நடத்துனரின்
உரத்த குரலெழுப்பலின்
போதெல்லாம் மீண்டும்
துளிர்க்கத் துவங்குகிறது
சாலையை அகலப்படுத்துவதற்காக
எப்பொழுதோ வெட்டியகற்றப்பட்ட
அந்த ஆலமரம்.

## 2. குழந்தைச் சித்திரம்

வெளியே
நசநசத்துக் கிடக்கிறது மழை
இருப்பினும் வீட்டிற்குள்
அத்தனைப் பெரும்
கதகதப்பைத் தருகிறது
இரு மலை முகட்டிற்கு நடுவே
குட்டி மகள் வரைந்து வைத்த
ஒற்றைச் சூரியன்.

## 3. இறுதி முயற்சி

எல்லோரும் ஒன்று
கூடி அழுது பார்த்தோம்
அவர் எழவில்லை
பின்னர் பறையடித்து
எழுப்ப முயற்சித்தோம்
அதற்கும் மசியவில்லை
இறுதி பிரமாஸ்திரமாகக்
கொழுத்திய வாணவெடிக்கும்
செவிசாய்க்காது போகவே
வேறு வழியின்றி ஆறடிக் குழிக்குள்
அழுந்தப் புதைத்தோம்.

வெ. தமிழ்க்கனல்
<mohanasundaram359@gmail.com>

# எஸ். தேவியின் 'பற்சக்கரம்'

**சுஜாதா செல்வராஜ்**

சுமங்கலி திட்டத்தின் கீழ் குறைந்த சம்பளத்தில் வேலைக்குச் செல்லும் பெண்களின் மீதான உழைப்புச் சுரண்டலை, பாலியல் தீண்டல்களை, அவர்களின் மன அழுத்தங்களை பதிவு செய்கிறது, இந்த நாவல். மூன்று வேளை உணவுக்கே உத்திரவாதம் அற்று, வறுமையின் பிடியில் சிக்கி மூழ்கிக் கொண்டிருக்கும் மக்களிடம் பெண் பிள்ளைகளின் பாதுகாப்பு, சகல வசதிகள், திருமணத்திற்கு பணம் என்ற கவர்ச்சிகரமான திட்டங்களுடன் ஒரு கை நீள்கிறது. அந்தக் கையை நம்பிக்கையோடு பற்றிக் கொள்வதன்றி வேறு வழி ஏது அவர்களுக்கு?!



கதையின் முதல் காட்சி உணவுக் கூடத்தில் இருந்தே தொடங்குகிறது. வகை வகையான உணவுகள் இருந்தும் ஏன் அவர்களால் சந்தோஷமாக உண்ண முடியாமல் போகிறது என்ற கேள்விக்கான விடையே கதையாக விரிகிறது.

உலகமயமாக்கலின் விளைவாக நிறைய பொருளாதார, சமூக, கலாச்சார, அரசியல் மாற்றங்களை நாம் சந்தித்து வருகிறோம்.

பன்னாட்டு நிறுவனங்களின் வருகையால் சிறு தொழில் நிறுவனங்கள், குடிசைத் தொழில்கள் பலவும் நலிவுற்று மூடப் படுகின்றன. அந்தத் தொழிலை நம்பி இருந்தவர்கள் குடும்பங்கள் என்னவாகின்றன? அவர்கள் வாழ்வாதாரத்துக்கு என்ன செய்கிறார்கள்? முதலாளியாக இருந்தவர் பெருநகரங்களில் கூலித் தொழிலாளிகளாக பிழைத்துக் கிடக்கிறார்கள். இந்த நாவல் அவர்களின் வாழ்வையும் பேசுகிறது.

பன்னாட்டு நிறுவனங்களின் வருகையால் காணாமல் போன தேன் மிட்டாய், ஜவ்வு மிட்டாய், பற்பொடி போலவே செல்லப்பனின் சோடா கலர் கடையும் காணாமல் போகிறது. அவரின் குடும்பமும் பொருளாதாரத்தில் நொடித்துப் போகிறது. ஆனால், அங்கும் பெண்களே முதலில் பலியாகிறார்கள். வெட்டி கௌரவம் பேசிக்கொண்டு வீட்டில் சும்மா இருக்கும் அப்பா, சுய நலனே பெரிதென வாழும் அண்ணன்கள் என்று இருக்கும் அந்த வீட்டில் இருந்தே பெண்கள் மீதான உழைப்புச் சுரண்டல் தொடங்குகிறது.



ரம்யா நூற்பாலைக்கு வேலைக்கு போகிறாள். நூற்றுக் கணக்கான ஏழை இளம் பெண்கள் வேறு வழியற்று வேலை செய்து கொண்டு இருக்கும் இடத்தில் பதவியும் அதிகாரமும் இருக்கும் ஒரு ஆண் என்னவெல்லாம் செய்ய முடியும்! அத்துமீறி பேசினாலும், சில்மிஷம் செய்தாலும் அதை புகாராக கொண்டு செல்ல முடியாத நிலையில் இருக்கும் பெண்களிடம் ஒரு பொறியாளன் மார்பை கிள்ளும் அளவுக்கு துணிகிறான். அவனை எதிர்க்கத் துணியும் அந்தப் பெண் அவனை திருப்பி அடிக்கிறாள். ஆனால், ஆலை நிர்வாகம் அந்தப் பெண்ணுக்கே தண்டனை வழங்குகிறது.

"இஞ்சினியருங்க தான் கிடைக்கமாட்டாங்க, பொட்டப் புள்ளைங்களுக்கு பஞ்சமே இல்லை, மந்தைங்க மாதிரி ஓட்டிக் கிட்டு வரலாம்" என்று ஆலை முதலாளி சொல்லும் இடம் ஒன்றே போதும் என்ன மாதிரியான கீழ் நிலையில் அங்கு பெண்கள் இருக்கிறார்கள் என்பதை நாம் உணர்ந்துகொள்ள.

நல்ல பையன் யாராவது உன்ன விரும்பினா ஜாதி பாக்காம அவன கல்யாணம் பண்ணிக்கோ என்று அம்மா தன் மகளைப் பார்த்துச் சொல்லுகிறார். சுமங்கலித் திட்டத்தை நம்பி மூன்று வருடங்களைத் தொலைத்த ரம்யாவின் முன்பு, 'என்னால உனக்கு கல்யாணம் பண்ணி வைக்க முடியாது பாப்பா' என்ற வார்த்தைகளோடு வந்து நிற்கும் தாயின் துயரம் சொல்லில் அடங்காது.

திருமணம் முடித்த பெண்ணை இழுத்துக்கொண்டு ஓடி வந்துவிட்ட மகனால் ஏற்படும் சிக்கலும் அதனால்



ஏற்படும் பணப் பிரச்சினையும் என்று ரம்யா பஞ் சாலைக்கு போவதற்கு முந்தைய கதை, பாஞ்சாலைக்கு போன பின்பான கதை, பஞ்சாலையை விட்டு வெளியேறி கல்யாணம், குழந்தைகள் என்று ஆகிவிட்ட ரம்யா அம்மாவின் திவசத்திற்கு செல்லும் கதை என்று இந்த நாவல் மூன்று பகுதிகளை பேசுகின்றது. கதை ஆசிரியர் இந்த மூன்று காலங்களையும் வரிசையாக சொல்லிச் செல்லாமல் கலைத்து அடுக்கி கதை சொல்லி இருக்கும் முறை புதிதாக இருக்கிறது. வாசிப்பின் சுவாரஸ்யத்தை அது கூட்டுகிறது.

புனைவு எழுத்து என்ற போதும் ஆசிரியரின் நேரடி அனுபவமும் இந்த நாவலில் கலந்தே இருக்கிறது. பெண்ணின் பாடுகளை ஒரு பெண் சொல்லும் போது அவ்வெழுத்து உண்மைக்கு மிக அருகில் இருக்கிறது.

பெரும் முதலாளிகளின் பேராசைக்கும் சுகபோக வாழ்விற்கும் தன் உழைப்பு மொத்தத்தையும் வாழ்நாளெல்லாம் பிழிந்து கொடுக்கும் பல்லாயிரம் மனிதர்களின் கதை இது. 'பற்சக்கரம்' என்ற கதையின் தலைப்பு தான் எத்தனைப் பொருத்தம்!!

சுஜாதா செல்வராஜ் suji19477@gmail.com

பற்சக்கரம் (நாவல்) - எஸ். தேவி; விலை ரூ. 280; வெளியீடு: எழுத்து பிரசுரம், முதல் தளம், ஜேஎம்பி மோட்டார் சைக்கிள்கள், 55(7) ஆர் பிளாக், 6வது அவன்யூ, அண்ணா நகர் மேற்கு, சென்னை, தமிழ்நாடு - 600040; தொலைபேசி: +91 89250 61999

# ஏங்கெல்ஸ்

## டோனி கிளிஃப்

### தமிழாக்கமும் அடிக்குறிப்புகளும்: செ. சண்முகசுந்தரம்

*‘மார்க்சியம் 1996’ கருத்தரங்கில் எங்கெல்ஸ் குறித்து டோனி கிளிஃப் ஆற்றிய உரை.*

மார்க்சுக்கு தான் ஒரு துணைவன்[3] மட்டுமே என்று ஏங்கெல்ஸ் தன்னைப் பற்றிக் கூறியதைச் சொல்லி நான் என் சொற்பொழிவை ஆரம்பிக்கிறேன். நேர்மையாகப் பார்த்தால் மார்க்சின் கடைக்கோடித் தொண்டனாக இருப்பதே ஒரு சாதனைதான். ஆனால், உண்மையில் ஃபிரடெரிக் ஏங்கெல்ஸ் தனது பங்களிப்பைக் குறைத்து மதிப்பிட்டதாகவும் மிக அடக்கமாகவும் இருந்தார் என்றே நான் கருதுகிறேன். அவர் மார்க்சுக்கு துணைவனாக மட்டுமல்லாமல் அதற்கு மேலாகவும் இருந்தார். அதன்மூலம் மார்க்சியத்திற்கு மிகப்பெரும் பங்களிப்பை அவர் செய்தார். மார்க்சை அவர் சந்திப்பதற்கு முன்பும் மார்க்ஸ் இறந்தபிறகான காலங்களில் தனித்தும் அவர் இச்சாதனையைச் செய்தார் என்றே நான் கூறுவேன்.

இது குறித்து மேலும் ஆராய்வதற்கு எளியவழி ஒன்று உள்ளது. மார்க்ஸ், ஏங்கெல்ஸ் இருவரின் மொத்தப் படைப்புகளை எடுத்துக்கொள்ளுங்கள். தொழிலாளர் வர்க்கத்தின் மையத்தன்மை பற்றிய கருத்து முதலில் அவர்களின் எழுத்துக்களில் எப்போது தோன்றியது என்பதைத் தேடுங்கள். மார்க்ஸ் அல்லது வேறு எவரும் இக்கருத்தை முதலில் கூறினரா? இல்லை, ஏங்கெல்ஸ் 1844இல் எழுதிய ‘இங்கிலாந்தில் தொழிலாளி வர்க்கத்தின் நிலைமை’[4] என்ற நூலில்தான் இக்கருத்து முதன்முதலில் காணக்கிடைக்கிறது. வரலாற்றில் மட்டுமல்ல, சமூகத்தின் எதிர்காலத்திலும் தொழிலாளர் வர்க்கத்தின் பங்கு குறித்த ஒரு சிறப்பான அறிமுகமே இந்நூல்.

இப்புத்தகத்தில் வெளிப்படுத்தப் பட்டிருக்கும் கருத்துகள் அனைத்தும் நூலகங்களில் உருவாக்கப்பட்டவை அல்ல என்பதை நாம் புரிந்துகொள்ளவேண்டும். மிகச்சிறந்த கருத்துகள் நூலகங்களில் உருவாக்கப்படுகின்றன என நீங்கள் நினைத்தால் நீங்கள் கனவு கண்டுகொண்டிருக்கிறீர்கள் என்றுதான் அர்த்தம். உண்மை என்னவென்றால், மார்க்ஸ் கம்யூனிஸ்ட் அறிக்கையில் எழுதியதுபோல, கம்யூனிஸ்டுகள், தொழிலாளர் வர்க்கத்தின் வரலாற்று மற்றும் சர்வதேச அனுபவங்களை பொதுமைப்படுத்துகிறார்கள். அதாவது தொழிலாளர் வர்க்கத்தின் இந்த அனுபவங்களிலிருந்து நீங்கள் கருத்துகளை உருவாக்கிடவேண்டும்.



இந்தச் செயல்முறை எப்படி வேலை செய்கிறது என்பதை அறிய ஒரு உதாரணம் பார்ப்போம். 1848இல் வெளியிடப்பட்ட கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கையில்[5], சோசலிசப் புரட்சிக்குப் பிறகு என்ன நடக்கும் என்பது குறித்த கருத்துக்கள் தெளிவற்றவையாகவே இருந்தன. பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் குறித்துப் பேசும் அறிக்கை, அது எப்படிப்பட்டதாக இருக்கும் எனச் சொல்லவில்லை. 1871ஆம் ஆண்டில் மார்க்ஸ் மேலும் ஒரு சிறு நூலை எழுதுகிறார். அந்நூலில் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் கீழ் எந்த அதிகார வர்க்கமும் ராணுவமும் கூட இருக்கமாட்டாது என்கிறார். அதிகார வர்க்கத்தைச் சேர்ந்த அனைத்து அதிகாரிகளும் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் என்கிறார். அதுமட்டுமல்ல அவர்கள் எந்நேரமும் மக்களால் திரும்ப அழைக்கப்படுவார்கள். சாதாரணத் தொழிலாளியின் ஊதியமே அவருக்கும் கிடைக்கும். பிரிட்டிஷ் நூலகத்தில் மார்க்ஸ் கடினமாக உழைத்திருக்கிறார் என்பதை இது காட்டுவதாக நீங்கள் நினைக்கக்கூடும். 1848ஆம் ஆண்டில் மார்க்ஸ் இப்படிச் சொல்லவில்லை, 1871ஆம் ஆண்டில் தான் இதைச் சொல்கிறார். 1871ஆம் ஆண்டின் உண்மைச் சம்பவமான பாரிஸ் கம்யூன்[6] நிகழ்வுகள்தான் மார்க்சுக்கு இத்தகைய கருத்துகளை உருவாக்கித் தந்தன. எந்த அதிகாரவர்க்கமும் இல்லாமல், நிலையான ராணுவமும் இல்லாமல் பாரிஸ்


ஏங்கல்ஸ்

தொழிலாளர்கள் தாங்களாகவே பாரிஸ் கம்யூனை உருவாக்கிக் கொண்டார்கள்.

தொழிலாளர் வர்க்கத்தின் மையத்தன்மையை ஏங்கெல்ஸ் கண்டுபிடித்ததற்கு வருவோம். இதில் மார்க்சைவிட ஏங்கெல்சுக்கு மேலதிக வாய்ப்பு ஒன்று இருந்தது. மார்க்ஸ், இங்கிலாந்து வருவதற்கு முன்பே ஏங்கெல்ஸ் இங்கு வாழ்ந்து வந்தார். இங்குதான் உலகின் முதல் தொழிலாளர் வர்க்க வெகுஜன இயக்கமான சார்ட்டிஸ்ட் இயக்கம்[7] தோன்றியது. நீங்கள் நிச்சயமாக இதைப் பற்றி பள்ளியில் படித்திருக்கப்போவதில்லை. புரட்சி என்பது பிரிட்டனுக்கு அந்நியமானது என்றே உங்களுக்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. ரஷ்யர்கள் ஜாரைக் கொன்றார்கள், பிரஞ்சுக்காரர்கள் கில்லடினைக் கொண்டு மன்னர்களை வெட்டினார்கள். சார்லஸ் மி குறித்து ஏதும் குறிப்புகள் இருப்பதில்லை. புரட்சி என்பது ஒரு வெளிநாட்டு நிகழ்வு என்றே கருதப்படுகிறது. எனவே, சார்ட்டிஸ்ட் அனுபவம் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கவில்லை.

ஆனால், 1842ஆம் ஆண்டில், பிரிட்டனில் தான், வரலாற்றின் முதல் பொது வேலைநிறுத்தம் நடந்தது. அதை நேரடியாகக் கண்ணுற்ற ஏங்கெல்ஸ் அதன்பால் பெரிதும் ஈர்க்கப்பட்டார். 1842ஆம் ஆண்டில் நடைபெற்ற இந்த வேலை நிறுத்தப் போராட்டத்தின்போது அற்புதமான செயல் ஒன்று நிகழ்த்திக் காண்பிக்கப்பட்டது. அதுதான் பறக்கும் மறியல்போராட்டம் (flyingpicket). அதைசமீபத்தில்தான் நாம் கண்டுபிடித்தோம் என நீங்கள் நினைக்கலாம். அல்லது 1970களில் அது கண்டுபிடிக்கப்பட்டது என நீங்கள் நினைக்கலாம். இல்லவே இல்லை. 1842இல் அது கண்டுபிடிக்கப்பட்டது. போராட்டக்காரர்கள் ஒவ்வொரு தொழிற்சாலைக்கும் சென்றனர். அங்கே வேலை நிறுத்தத்தின் சாத்தியம் குறித்து ஆராய்வர். சாத்தியமாகும் பட்சத்தில் உடனடியாக அங்கே மறியல் போராட்டம் தொடங்கப்படும். அக்காலத்தில் அது மிகப்பெரும் சாதனையாக அமைந்தது. 1842ஆம் ஆண்டுப் போராட்டத்தின் மையமாக விளங்கிய மான்செஸ்டர் நகரில் உள்ள சார்ட்டிஸ்ட்களை ஏங்கெல்ஸ் அறிந்திருந்தார் என்பதை நீங்கள் நினைவில் வைத்தாலொழிய 'இங்கிலாந்தில் தொழிலாளி வர்க்கத்தின் நிலைமை' என்ற ஏங்கெல்சின் புத்தகத்தை உங்களால் விளங்கிக் கொள்ளமுடியாது.

அவர் எழுதியப் புத்தகத்தைப் படிக்கும்போது நமக்கு இப்போது பழகிப்போன பல கருத்துகளை

அவர் அப்போதே அறிமுகம் செய்து வைத்திருப்பதைக் காணமுடியும். ஒரு நிகழ்வு நடந்து முடிந்து வெகுகாலம் ஆன பிறகு அது குறித்த முடிவுகள் எடுப்பது மிகவும் எளிதானது. 1830களிலோ 1840களிலோ நீங்கள் வாழ்ந்திருந்தீர்கள் என்று வைத்துக் கொள்வோம், ஏங்கெல்சைப் போன்று நீங்களும் நுண்ணறிவைப் பெற்றிருப்பீர்களா? இதை மனதில் வைத்துப் பார்க்கும்போது ஏங்கெல்சின் ‘இங்கிலாந்தில் தொழிலாளி வர்க்கத்தின் நிலைமை’ என்னும் புத்தகம் எவ்வளவு ஒரு அற்புதமான புத்தகம் என்பது தெளிவாகும்.

ஏங்கெல்ஸ் இப்புத்தகத்தை எழுதியபோது அவருக்கு 23 வயது மட்டுமே. தொழிலாளர் வர்க்கத்தின் வாழ்க்கை குறித்த பெரிய விளக்கங்கள் இந்நூலில் இல்லாவிட்டாலும் அவரின் எழுத்துகள் சுவாரசியம் நிறைந்தவையாக இருக்கும். தொழிலாளர் வர்க்க வாழ்க்கையைப் பற்றி அவர் எழுதும்போது, சார்லஸ் டிக்கென்ஸின்[8] பாணியை அவர் பின்பற்றுவதில்லை. “ஓ, ஏழை பிசாசுகள்! தொழிலாளர்கள் கஷ்டப்படுகிறார்கள். ஐயா, தயவுசெய்து எனக்கு இன்னும் கொஞ்சம் கிடைக்குமா?.” இப்படி இல்லாமல் ஏங்கெல்சின் நடை எதிர்மாறாக இருக்கும். அதில் நம்பிக்கை துளிர்க்கும். தொழிலாளர்கள் வரலாற்றால் வஞ்சிக்கப்பட்டவர்களாக அல்லாமல், வரலாற்றின் ஒரு பகுதியாக, வரலாற்றை உருவாக்குபவர்களாகக் காட்டியிருப்பார். புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கும் கீழ்க்கண்ட ஒரு மேற்கோள் இதை உங்களுக்கு விளக்கும்.

> *விரிவாகவும் மறைமுகமாகவும் இப்போது நடைபெறும் பணக்காரர்களுக்கு எதிரான ஏழைகளின் யுத்தம் விரைவில் நேரடியான, ஒட்டுமொத்தமான யுத்தமாக மாறக்கூடும். அமைதியான தீர்வுக்கான காலம் முடிந்துவிட்டது. மாபெரும் இயக்கத்திற்கு ஒரு சிறு தூண்டுதல்தான் இப்போது தேவை. அதன்பின் ‘அரண்மனைகளுக்கு எதிரானப் போர், குடிசைகளுக்கு அமைதி’ என்னும் போர்முழக்கம் நிலம் முழுவதும் கிளம்பும். பணக்காரர்கள் விழித்துக்கொள்ளும் காலம் அப்போது தாமதமாகியிருக்கும்.*

தொழிற்சங்கங்களின் முக்கியத்துவத்தையும் ஏங்கெல்ஸ் அங்கீகரித்தார். தொழிற்சங்கங்கள் வெறுமனே தொழிலாளர்களின் நிலைமைகளை மேம்படுத்தும் அமைப்புகள்தான் என்று பலர் இன்று நினைக்கிறார்கள். இப்போது டோனி பிளேயரின்[9] செல்வாக்கின் கீழ், தொழிலாளர்களின் அமைப்புகளான இத்தொழிற்சங்கங்கள் தொழிலாளர்களின் நலன்களை முதலாளிகளுக்கு விற்பனை செய்யும் அமைப்புகளாக உங்களுக்குத் தோன்றக்கூடும். தொழிற்சங்கத் தலைவர்கள் இப்படி வெளிப்படையாகப் பேசப்போவதில்லை என்றாலும் அவர்களின் கைகளில் தொழிற்சங்கங்கள்



டோனி கிளிஃப்

அனைத்தும் சமரசத்திற்கானதே. தொழிற்சங்கங்கள் தங்களின் தொடக்கப் பரிமாணத்தில் அப்போது இருந்தபோதிலும், ஏங்கெல்ஸ் அதை வேறு கோணத்தில் பார்த்தார். தொழிற்சங்கங்களின் உண்மையான திறனை அவர் உணர்ந்துகொண்டார்.

அவரைப் பொறுத்தவரை தொழிற்சங்கங்கள் என்பன போர்ப்பள்ளிகள். அவை சமரசத்திற்கானவை அல்ல. ஒரு சிறிய ஆதாயத்தை அடைவதும் அத்துடன் நிறுத்திக் கொள்வதும் இதன் நோக்கமாக இருக்கமுடியாது. ஏனென்றால், போரில் தொழிற்படுவது மிக எளிய விதிதான். ஒருவருக்கு வெற்றி, மற்றொருவருக்கு தோல்வி. ஏங்கெல்சின் பார்வையில் தொழிற்சங்கம் என்பது போரின் ஆயுதம். ‘தொழிற்சங்கங்கள் என்பன கம்யூனிசப் பள்ளிகள்’ என்னும் சொற்றொடரை பல ஆண்டுகளுக்குப் பின்னர் லெனின் பயன்படுத்தினார்.

மார்க்சைச் சந்திப்பதற்கு முன்பே ஏங்கெல்ஸ் இப்படி எழுதிக் கொண்டிருந்தார் என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். மார்க்சுக்கு முன்னரே தொழிலாளர் வர்க்கத்தின் மையத்தை ஏங்கெல்ஸ் உணர்ந்திருந்தார் என்று சொல்வது மார்க்சை விமர்சிப்பதாக ஆகாது. ஏங்கெல்ஸ் உலகின் தொழிற்பட்டறையான பிரிட்டனில் வசித்து வந்தார். அதிலும் தொழிற்புரட்சியின் மையமான மான்செஸ்டரில் அவரின் இருப்பிடம் இருந்தது. எனவே, இது மாதிரியான கருத்துகள் முதன்முதலில் ஏங்கெல்சிடமிருந்து இயற்கையாகவே வந்தன.

நீங்கள் புதுமையான சிந்தனைகளுக்குக்



கார்ல் மார்க்ஸ்

காப்புரிமைகள் பெறமுடியாது. ஒரு சிறந்த யோசனையைத் தோற்றுவித்தவர் யார் என்று நீங்கள் சொல்ல முடியாது. ஏனென்றால், புதுமையான சிந்தனைகள் நதியைப் போன்றது. பற்பல நீரோடைகளிலிருந்து ஒரு நதி உருவாகிறது. மார்க்சியத்திற்குப் பங்களிக்கும் நீரோடைகளில் ஒன்று ஏங்கெல்ஸ். எனவேதான், ஏங்கெல்சை மார்க்சுக்கு அடுத்து இரண்டாம் நிலையில் வைத்துப் பேசப்படுவது எனக்குப் பிடிக்கவில்லை. ஏனென்றால், ஒட்டுமொத்த மார்க்சிய இயக்கத்திற்குப் பங்களிக்கும் ஒரு சுயாதீன நீரோட்டமாக அவர் காணப்படவில்லை. ஆனால், நம்மை மார்க்சிஸ்டுகள் என்று அழைத்துக்கொள்வதில் நான் மகிழ்ச்சியடைகிறேன். ஏனென்றால், ஏங்கெல்சிஸ்ட் என்று உச்சரிப்பதை விட மார்க்சிஸ்ட் என உச்சரிப்பது மிகவும் எளிமையானது.

சில சமயங்களில் மார்க்ஸ், ஏங்கெல்சின் படைப்புகளில் நாம் வித்தியாசத்தைக் காணமுடியும். இருவரின் எழுத்துகளையும் நாம் ஒப்பிட்டுப் பார்த்தால், ஏங்கெல்ஸ் பெரும்பாலும் முன்னோடியாக இருப்பார். ஆனால், மார்க்ஸ் அதில் மிக ஆழமாகச் சென்றிருப்பார். மார்க்ஸ் வெறுமனே ஏங்கெல்ஸிடமிருந்து சிந்தனைகளைப் பெற்றுக்கொண்டார் என்று நான் கூற முயற்சிக்கவில்லை. அது உண்மையல்ல. இங்கிலாந்தில் தனது அனுபவங்களால் ஏங்கெல்ஸ் முன்னோடியாக இருந்தார். ஆனால், மார்க்ஸ் அதற்கும் அப்பால் சென்றார். அவர் கருத்துகளை மேலும் வளர்த்தார், வளப்படுத்தினார்.

உதாரணமாக, கம்யூனிசம் குறித்த வரையறையை எடுத்துக் கொள்ளுங்கள். ஏங்கெல்ஸ் அதை எவ்வாறு வரையறுத்தார்? சுருக்கப்பட்ட, மிகவும் எளிமையான ஒரு பாணியைப் பயன்படுத்தி (மார்க்ஸை விட மிகவும் எளிமையானது) அவர் பின்வருவனவற்றை எழுதினார்:

*கம்யூனிசம்:*

*1. முதலாளித்துவத்தின் நலன்களுக்கு மாறாக பாட்டாளி வர்க்கத்தின் நலன்கள் மேலோங்கி இருப்பதை உறுதி செய்கிறது.*

*2. தனியார் சொத்துக்களை ஒழிப்பதையும் அதனை சமூகத்தின் பொதுச்சொத்தாக மாற்றுவதையும் உறுதி செய்கிறது.*

*3. ஜனநாயகப் புரட்சியைத் தவிர வேறு எதுவொன்றாலும் இந்த நோக்கங்களை அடையமுடியாது என்பதை உறுதி செய்கிறது.*

கம்யூனிசத்தின் வரையறைக்குத் தேவையான அனைத்தும் இதில் உள்ளன. புரட்சிகர, ஜனநாயக சக்திகளால் இது அடையப்படுமேயல்லாது, வெறுமனே ஐம்பது நபர்களிடமிருந்து அதிகாரத்தை எடுக்கும் ஐம்பது நபர்கள் மேற்கொள்ளும் இரத்தக்களரி சதி அல்ல இது.

இந்த வரையறை மிகவும் முக்கியமானது. நமக்கு ஏன் ஒரு புரட்சி தேவை என்று அவர் விளக்கும்போது, இரண்டு காரணங்களுக்காக நமக்கு ஒரு புரட்சி தேவை என்று அவர் கூறுகிறார்.

“ஆளும் வர்க்கத்தை வேறு எந்த வகையிலும் தூக்கி எறிய முடியாது என்பதால் மட்டுமல்லாமல், காலம் காலமாக சமூகத்தில் சேமிக்கப்பட்டு வந்திருக்கும் கசடுகளை அழித்து, ஒரு புது சமுதாயத்தை உருவாக்க, புரட்சியால் மட்டுமே சாத்தியம்.”

நாங்கள் ஒரு வர்க்க சமுதாயத்திலிருந்து வந்தவர்கள். நம் தலையில் அவ்வளவு அசுத்தம் இருக்கிறது. சமுதாயத்தில் நிலவும் கருத்துக்கள் ஆளும் வர்க்கத்தின் கருத்துக்கள், ஆளும் வர்க்கத்தின் கருத்துக்கள் எல்லாவற்றிலும் ஆதிக்கம் செலுத்துகின்றன.

வெளிப்படையான, சுதந்திரமான கருத்துக்கள் மட்டும் நம்மை பாதிக்கவில்லை. இனவெறி என்பது ஒரு மோசமான கருத்து, பிற்போக்குத்தனமானது என்பதை கவனிப்பது கடினம் அல்ல. ஆளும் அதிகார வர்க்கத்தின் கருத்துகள் அடிப்படை விஷயங்களை பாதிக்கின்றன. பல வருடங்களுக்கு முன்பு என் மகளுக்கு ஏழு அல்லது எட்டு வயதாக இருந்தபோது நடந்த ஒரு நிகழ்வு என் நினைவுக்கு வருகிறது. அவள் என்னுடன் வாக்குவாதம் செய்வாள். என்ன பிரச்னைக்காக அவள் வாக்குவாதம் செய்தாள் என்பது என் நினைவில் இல்லை. அவள் சொன்னாள், “நீங்கள் சொல்வது சரியாகத்தான் இருக்க வேண்டும்.” நான் அவளிடம் கேட்டேன்: “நான் ஏன் சரியாக இருக்க வேண்டும்?.” அதற்கு அவள் சொன்னாள்: “ஏனென்றால், நீங்கள் என்னை விட வயதானவர், அதனால் நீங்கள் என்னை விட புத்திசாலிதான்.” நான் சொன்னேன்: “சரி, நான் உன்னை விட புத்திசாலி. நீ உன் குழந்தையை விட புத்திசாலியாக இருப்பாய். அதாவது மக்கள் மேலும் மேலும் முட்டாளாகிக் கொண்டே இருப்பார்கள்.”

இளைஞர்களை விட முதியவர்கள் சிறந்தவர்கள் என்னும் கருத்தும் அதற்கு கீழ்ப்படிய வேண்டும் என்பதும் படிநிலை படிநிலையாக வந்துகொண்டே இருக்கிறது. இது நமது சமுதாய அமைப்பிலிருந்து வருகிறது. மக்கள் அதை கவனிக்கவில்லை.

நமது சமூகத்தில் நிலவும் கருத்துக்கள் ஆளும் வர்க்கத்தின் கருத்துகளாக இருப்பதால், ஆக்கப்பூர்வ செயலாகக் கருதப்படும் ஒரு புரட்சியின் மூலமாக அல்லாது வேறு எதனாலும் அதை அகற்றமுடியாது. புரட்சியை ஒரு சதி என்று நீங்கள் நினைத்தால், அதிகாரத்தில் இருக்கும் 50 ஜெனரல்கள் கொண்ட ஒரு சிறுபான்மையினர் குழு மற்றுமொரு 50 ஜெனரல்கள் கொண்ட ஒரு குழுவால் வெளியேற்றப்படுதல் மட்டுமே நடக்கும். ஆனால், மக்களின் கருத்துகளில் எம்மாற்றமும் நிகழ வாய்ப்பில்லை. புரட்சிக்கும் வாய்ப்பில்லை. ஆனால், உழைக்கும் வர்க்கத்தின் விடுதலை என்பது உழைக்கும் வர்க்கத்தின் செயலினால் மட்டுமே சாத்தியமாகும் என்று நீங்கள் பேசினால், வெகுமக்கள் தங்கள் கருத்துகளை மாற்றிக்கொள்ளும் வரை புதிய சமுதாயத்தைக் கொண்டுவர நாங்கள் தகுதியற்றவர்களாகவே இருப்போம். கடந்த காலத்தின் பழைய கருத்துகளிலிருந்து தங்களைத் தூய்மைப்படுத்திக்கொள்ள மோசஸ், இஸ்ரவேலர்களை 40 ஆண்டுகளாக பாலைவனத்திலேயே அழைத்துச் செல்ல வேண்டியிருந்தது. லெனின் தொடர்ந்து கூறுவார், “புரட்சியின் ஒரு நாளில் தொழிலாளர்கள் ஒரு நூற்றாண்டை விட அதிகமாக கற்றுக்கொள்கிறார்கள்.”

தொழிலாளர்கள் தங்கள் தலையில் திணித்திருக்கும் குப்பைகளை அகற்ற புரட்சி தேவை என்பது ஏங்கெல்சின் கருத்து. அவர்கள் புரட்சியில் போராடும்போது, அதில் தீவிரமாக ஈடுபடும்போது தங்களின் கூட்டு சக்தியைக் கண்டறிந்து கொள்கிறார்கள். இந்தக் கருத்தைச் சுருக்கமாகச் சொல்லும்படி யாராவது என்னிடம் கேட்டால், ஜான் ரீடின் உலகைக் குலுக்கிய பத்து நாட்கள் புத்தகத்தில் உள்ள ஒரு சிறுகதையைக் குறிப்பிடுவேன். இது ரஷ்யப் புரட்சியின் தாக்கத்தை அழகாகக் காட்டுகிறது. பெட்ரோகிராட் சோவியத்தின் தலைவரான ட்ரொட்ஸ்கி, இரண்டு தொழிலாளர்கள் நுழைவு அனுமதிச் சீட்டை சரிபார்த்துக் கொண்டிருக்கும் சோவியத் கட்டிடத்திற்கு வருகை புரிகிறார். (இந்த நேரத்தில் எதிர்ப்புரட்சியாளர்கள் கையெறி குண்டுகளை வீசும் அபாயம் இருந்தது). ட்ரொட்ஸ்கி அங்கு வந்தபிறகு தன் சட்டைப் பையைத் தடவிக்கொண்டே அக்காவலர்களிடம் சொல்கிறார்: “நான் மிகவும் வருந்துகிறேன். என்னிடம் அனுமதிச்சீட்டு இல்லை. ஆனால், நான் ட்ரொட்ஸ்கி.” அதற்கு ஒரு தொழிலாளி ட்ரொட்ஸ்கியைப் பார்த்து சொல்கிறான்: “நீங்கள் யாராக இருந்தாலும் எனக்கு கவலையில்லை.” தொழிலாளர்களின் சக்தி என்பது இதுதான். எண் 10, டவுனிங் தெருவில் வசிக்கும் ஜான் மேஜரிடம்[10] “அட்டா, நீங்கள் யாரென்று எங்களுக்குத் தெரியாதே” என்று தைரியமாகச் சொல்ல உங்களுக்கு ஒரு புரட்சி தேவை. இதுதான் உண்மையான தொழிலாளர் சக்தியைக் குறிக்கும். அதனால்தான் தொழிலாளர்கள் தங்களை மாற்றிக்கொள்ள ஒரு புரட்சி தேவை என்னும் ஏங்கெல்சின் கருத்து அற்புதமான கருத்தாக இருக்கிறது.

ஏங்கெல்ஸ் குறித்து வேறு சில செய்திகள் உள்ளன. கம்யூனிஸ்ட் அறிக்கையின் தலைப்புப் பக்கத்தில், இதை எழுதியது கார்ல் மார்க்ஸ், பிரடெரிக் ஏங்கெல்ஸ் என்று இருந்தாலும், உண்மையில் அதை எழுதியது மார்க்ஸ் மட்டுமே. ஆனால், அறிக்கையின் முதல் வரைவை ஏங்கெல்ஸ் எழுதினார். இது கம்யூனிசத்தின் கோட்பாடுகள் என அழைக்கப்படுகிறது. இவ்விரு வரைவுகளையும் ஒப்பிடுவது மிகவும் உற்சாகம் தரக்கூடியது. ஏனென்றால், கம்யூனிஸ்ட் அறிக்கையில் இல்லாத பல கேள்விகளுக்கான விடைகள் கம்யூனிசக் கோட்பாட்டு வரைவில் இருக்கின்றன.

உதாரணமாக, கம்யூனிசக் கோட்பாட்டு வரைவில் மிக முக்கியமான கேள்வி ஒன்று விவாதிக்கப்படுகிறது.



கார்ல் மார்க்ஸ், ஏங்கல்ஸ், மார்க்ஸின் மூன்று மகள்களுடன்

சோசலிசம் ஒரு நாட்டில் மட்டும் தனித்து சாத்தியமா? என்பதே அந்த முக்கியமான கேள்வி. இந்த கேள்விதான் 80, 90 ஆண்டுகளுக்குப் பிறகு ஸ்டாலினுக்கும் ட்ரொட்ஸ்கிக்கும் இடையிலான ரத்தக்களரிக்கும் வழிவகுத்தது. ஏங்கெல்ஸ் இக்கேள்வியை எழுப்பி அதற்கான பதிலையும் தருகிறார்: "ஒரு நாட்டில் சோசலிசம் சாத்தியமில்லை. ஏனென்றால், உலகமானது சர்வதேசப் பொருளாதாரத்தின் கீழ் உள்ளது." கம்யூனிசக் கோட்பாட்டு வரைவை நீங்கள் காணும்போது ஏங்கெல்சின் பங்களிப்பை அதில் நீங்கள் காணமுடியும். கம்யூனிஸ்ட் அறிக்கையில் உள்ள அனைத்து கருத்துகளும், பிரம்மாண்டமானதாக இல்லாவிட்டாலும், ஏற்கனவே தெளிவாகவும் எளிமையாகவும் உள்ளன. அதையே நீங்கள் மார்க்சின் வழியே அதைக் காணும்போது அதுவே அழகான, பெரிய சுவரோவியமாக நமக்குக் காட்சியளிக்கிறது. அதையே ஏங்கெல்சின் வழியே கண்ணுறும்போது ஒரு சிறிய படத்தையே காண்கிறீர்கள். ஆனால், அதே அடிப்படையான கருத்துகளும் அதில் இருக்கின்றன.

நிரந்தரப் புரட்சி குறித்த மேலும் சில குறிப்புகள்... நிரந்தரப் புரட்சிக் கோட்பாட்டின் மூலகர்த்தரான டிராட்ஸ்கி குறித்து அனைவரும் பேசுகிறோம். டிராட்ஸிக்கு முன்னரே, ஏங்கெல்ஸ் 1848இல் நிரந்தரப் புரட்சி குறித்து எழுதினார் என்பதும் முழு உண்மை.

முதலாளித்துவம் கோழைத்தனமானது என்றும், கிழக்கே செல்லச் செல்ல அது இன்னும் அதிகக் கோழைத்தனம் கொண்டது என்றும் ஏங்கெல்ஸ் எல்லோருக்கும் முன்னதாகவே எழுதினார். ஆங்கிலேய முதலாளித்துவ வர்க்கம் அரசனின் தலையை வெட்டத் துணியுமானால், பிரெஞ்சு முதலாளித்துவம் ஒரு மன்னனின் தலையை வெட்டிவிடும் அளவுக்கு நம்பிக்கை கொண்டிருந்தது.

கிழக்கே செல்ல செல்ல முதலாளித்துவம் ஏன் அதிகக் கோழைத்தனம் கொண்டிருக்கிறது? ஏனென்றால், அங்கு தொழில் வளர்ச்சி தாமதமாகத்தான் வளர்ச்சி அடைந்தது. அதனால் முதலாளித்துவமும் அங்கு மெதுவாகத்தான் வளர முடிந்தது. முதலாளித்துவ உற்பத்தியானது இப்போது பெரும் உற்பத்தி அலகுகளில் நடைபெறுகிறது. அங்கே சக்தி வாய்ந்த தொழிலாளர் இயக்கங்கள் உள்ளன. 19ஆம் நூற்றாண்டின் முதலாளித்துவ வர்க்கம் இந்தப் போக்கை மிக உன்னிப்பாக கவனித்து வருகிறது. 17ஆம் நூற்றாண்டில் பிரிட்டனில் இருந்த முதலாளித்துவ வர்க்கம், "நாம் புரட்சி செய்யத் துணிந்தால், பாட்டாளி வர்க்கமும் நமக்கு எதிராக எழுச்சி பெறுமா?" என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்ளவில்லை. பாட்டாளி வர்க்க எழுச்சி குறித்த அச்சம் அப்போது இல்லை. பிரஞ்சுப் புரட்சியின் போதும் இதுதான் நிலை. பாட்டாளி வர்க்கம் வேலை நிறுத்தத்தில் ஈடுபடவில்லை. உணவுக்காகவும் விலை உயர்வை எதிர்த்தும் மட்டுமே கலவரங்கள் நடந்தன.

முதலாளித்துவத்தைப் பற்றி ஏங்கெல்ஸ் பின்வருமாறு எழுதுகிறார்: "உங்கள் வெகுமதி குறுகிய கால ஆட்சியாக இருக்கும். நீங்கள் சட்டங்களைப் பிறப்பிக்கலாம், உங்கள் சொந்த மாட்சிமையில் சூரிய ஒளி போன்று பிரகாசிக்கலாம், நீங்கள் அரச மண்டபங்களில் விருந்து படைக்கலாம், அரசனின் மகளையும் கவருவீர்கள். ஆனால், தூக்கிலிடுபவனின் காலணி வாசலில் உள்ளது என்பதை நினைவில் கொள்ளுங்கள்."

நிரந்தரப் புரட்சி என்றால் என்ன என்பதை விவரிக்கும் ஒரு அருமையான சித்தரிப்பு இது. 19ஆம் நூற்றாண்டில் முதலாளித்துவம் நிலப்பிரபுத்துவத்திற்கு எதிராகத் தனது சொந்தப் புரட்சியை நடத்த முடியாத அளவுக்கு கோழைத்தனமாக இருந்தது. ஏனென்றால், அதன் தொடர்ச்சியாக பாட்டாளி வர்க்கத்தின் மூலம் தனக்கு ஏற்படவிருந்த அச்சுறுத்தலை தனக்கு மிக நெருக்கமாகவே அது உணர்ந்தது.

மற்றுமொரு குறிப்பு: மார்க்சின் மூலதனத்தின் முழுப் பெயர் என்ன? நீங்கள் அனைத்தையும் படிக்கவில்லை என்றாலும், முதல் பக்கத்தையாவது படித்திருக்கலாம். அதன் துணைத் தலைப்பு 'அரசியல் பொருளாதாரத்தின் விமர்சனம்'. ஆச்சர்யமாக இருக்கிறது அல்லவா? 1846இல் ஏங்கெல்ஸ் 'அரசியல் பொருளாதாரத்தின் விமர்சனம்' என்ற தலைப்பில் ஒரு சிறிய துண்டுப்பிரசுரம் எழுதினார். இது கிட்டத்தட்ட மூலதனத்தைப் போல பிரம்மாண்டமாக இல்லை என்பது உண்மைதான். மார்க்ஸ் 26 ஆண்டுகள் ஆராய்ச்சி செய்து மூலதனத்தைப் படைத்தார். ஏங்கெல்ஸின் துண்டுப்பிரசுரம் அப்படி ஒன்றும் இல்லை. ஆனால், பல அடிப்படையான சிந்தனைகள் அதில் உள்ளன. எடுத்துக்காட்டாக நிலையான,

மாறக்கூடிய மூலதனத்துக்கு இடையேயான வேறுபாடு, சுரண்டல், உபரி மதிப்பு, வாடகைக் கோட்பாடு இப்படிப் பல.

ஏங்கெல்ஸ் என்பவர் மார்க்சைப் பின்பற்றிய ஒரு சாதாரண மனிதர் என்று மக்கள் கருதுவதாகச் சொல்லப்படும் யூகத்தை நான் வெறுக்கிறேன். ஏங்கெல்சைப் பற்றிய சோகமான விஷயம் என்னவென்றால், மார்க்சைப் பொறுத்தவரை அவர் எப்போதும் மிகவும் அடக்கமாகவே இருந்தார் என்பதுதான். அவர் மார்க்ஸ் மீது அளவற்ற ஈடுபாடு கொண்டிருந்தார். அவருடைய ஈடுபாட்டை நீங்கள் கற்பனை செய்துகூடப் பார்க்கமுடியாது. அவரது அனைத்து உள்ளுணர்வுகளையும் மீறி, அவர் தனது வாழ்நாளின் பெரும்பகுதியும் ஒரு தொழிற்சாலை மேலாளராகப் பணியாற்றினார் என்பதிலிருந்து இந்த உண்மையை நாம் நிலைநாட்டமுடியும். அவருக்கு இப்பதவி பிடிக்கவில்லை. மேலாளர்களையும் தொழிலாளர்களையும் ஒன்றாக இருக்கவிடுங்கள் என்னும் வர்க்க நல்லிணக்கத்தை அவர் நம்பவில்லை. ஆனால், தனிப்பட்ட முறையில் அவர் ஒரு தொழிற்சாலை மேலாளராக இருந்துவந்தார்.

ஏங்கெல்சின் குடும்பத்திற்கு மான்செஸ்டரில் ஒரு தொழிற்சாலை இருந்தது. அதை ஏங்கெல்ஸ் நிர்வகிக்க வேண்டும் எனக் குடும்பத்தார் தொடர்ச்சியாக அவரை வற்புறுத்தி வந்தார்கள். தன் வாழ்நாள் முழுவதும் இந்த வற்புறுத்தலை ஏங்கெல்ஸ் வெறுத்தார். அவர் ஏன் அப்படிச் செய்தார் தெரியுமா? ஒரே ஒரு காரணத்திற்காக மட்டுமே அவர் அப்படிச் செய்தார். மார்க்சுக்காக. மார்க்ஸ் தன்வாழ்நாள் முழுவதும் ஏதும் சம்பாதிக்கவேயில்லை. மார்க்சின் அம்மா மிகச் சரியாகவே அவரிடம் கேட்டார்: "இந்த பாழாய்ப்போன மூலதனத்தை எழுதுவதற்குப் பதிலாக ஏன் நீ கொஞ்சம் மூலதனம் கொண்டுவரக்கூடாது?."

மார்க்ஸ் என்றைக்குமே மூலதனத்தை உருவாக்கியது கிடையாது. ஆண்டாண்டு காலமாக ஏங்கெல்ஸ்தான் மார்க்சின் குடும்பத்திற்கும் அவரது குழந்தைகளுக்கும் பணத்தை வழங்கினார். மார்க்ஸ் இறந்தபிறகு, தன்னுடைய தொழிற்சாலை மேலாளர் பதவியைத் துறந்துவிடலாம் என அவர் நிம்மதி பெருமூச்சு விட்டிருக்கலாம். இந்தக் கொடூரமான வேலையில் நீடிக்க அவர் சிறிதுகூட விரும்பவில்லை. அவருடைய தியாகம் வியக்கத்தக்கது மட்டுமல்ல, அவரது அடக்கத்தையும் வெளிப்படுத்தியது.

இப்போது நான் இன்னொரு விஷயத்தைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தைப் பற்றி நாம் எப்போதும் மார்க்சின் தனித்துவமான பங்களிப்பாகப் பேசுகிறோம். ஆனால், இந்தக் கருத்தை ஏங்கெல்சின் எழுத்துகளில் காணலாம்: "வரலாறு ஒன்றும் செய்யாது. அதற்கு அபரிமிதமான செல்வம் இல்லை. அது போர்களை நடத்தாது. மனிதனே, உண்மையான வாழும் மனிதனே அனைத்தையும் செய்பவன். அதனை உடைமையாக்கிக் கொண்டு போராடுகிறான். மனிதன் தனது லட்சியத்தை அடைவதற்கு எடுக்கும் முயற்சிகளின் தொகுப்புதான் வரலாறே தவிர வேறெதுவுமில்லை."

இருப்பினும், ஏங்கெல்சை ஒரு நிர்ணயவாதி (Determinist) என்றே மக்கள் குற்றம் சாட்டுகின்றனர்.

ஏதாவது ஒன்று முன்னதாகவே தீர்மானிக்கப்பட்டுவிட்டதாகஎனக்குத்தெரியவந்தால் நான் ஒன்றும் செய்யமாட்டேன். இதுதான் உண்மை. சோசலிசம் தவிர்க்க முடியாததாக இருந்தால், நான் கைகளைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்து புன்னகைப்பேன்: "சோசலிசம் வருகிறது!" எனவே, நீங்கள் அதைப் பற்றி எதுவும் செய்ய வேண்டியதில்லை. நீங்கள் வரலாற்றுக்கு பாதை அமைத்துத்தரவேண்டியதில்லை. அது தன் வழியைத் தானே உருவாக்கிக் கொள்ளும். மாறாக, பாசிசத்தின் வெற்றி தவிர்க்க முடியாதது என்று நான் நினைத்தால், நான் உங்களுக்கு நேராகச் சொல்கிறேன், நான் கைகளைக் கட்டிகொண்டு உட்கார மாட்டேன்; படுக்கை அறைக்குச்சென்று, போர்வையில் ஒளிந்துகொண்டு அழுதுகொண்டிருப்பேன். இரண்டு சந்தர்ப்பங்களிலும் நான் எதுவும் செய்ய மாட்டேன். ஆனால், ஏங்கெல்ஸ் அதை முற்றிலும் சரியாகக் கட்டமைக்கிறார். மனிதர்களின் செயல்பாடுகள்தான் வரலாறாகிறது. பாஸ்டில் சிறைச்சாலையைத் தகர்த்தது பிரஞ்சு வரலாறு அல்ல, 1789ஆம் ஆண்டு ஜூலை 14ஆம் தேதி பாஸ்டில் மீது தாக்குதல் நடத்தியது பிரெஞ்சு நாட்டின் ஆண்களும் பெண்களும் தான். ரஷ்யப் புரட்சியை உருவாக்கியது வரலாறு அல்ல, ரஷ்யத் தொழிலாளர்களும் ரஷ்யப் போர் வீரர்களும்தான் ரஷ்யப் புரட்சியை உருவாக்கினர்.

வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தின் பொருள் என்பது இதுதான்: வரலாற்றின் பொருள் மனிதர்கள். தங்களின் கட்டுப்பாட்டில் இல்லாத சூழலில்தான் அவர்கள் செயல்படுகிறார்கள். நான் ஆங்கிலம் பேசுகிறேன் - அதைப் பற்றி எந்த கேள்வியும் இல்லை. ஒருவேளை நீங்கள் அதை நம்பாமல் இருக்கவும் கூடும். ஆனால், நான் ஆங்கில மொழியைக் கண்டுபிடிக்கவில்லை. அதை நான் கொஞ்சம் உருமாற்றியிருக்கவும் கூடும். ஆனால், ஆங்கிலம் என்னிடமிருந்து சுயாதீனமாக உள்ளது. நான் ஆங்கிலத்தை உங்களிடம் பேசவில்லை, உங்களிடம் பேசியது மொழி மட்டுமல்ல, உங்களிடம் நான் பேசியது சில அபூர்வ விஷயங்கள் குறித்தது, உடைந்த ஆங்கிலத்தில் உங்களிடம் பேசியது 'நான் - மி' அல்ல. வரலாற்றின் ஊக்கமிக்க செயலில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் me தான் அது. ஏங்கெல்ஸின் கருத்துருவாக்கத்தில் இது மிக முக்கியமானது.

இன்று சிலர் ஏங்கெல்ஸுக்கு எதிரானவர் என்று மார்க்சை காண்பிக்க முயற்சிக்கின்றனர். கோட்பாட்டை நடைமுறையில் இருந்து பிரிக்க விரும்புவதால் அவர்கள் இப்படிச் செய்கிறார்கள்.

வேறு சில சமயங்களிலும் இப்படி நடந்துள்ளது. ஸ்டாலினுக்கும் ட்ரொட்ஸ்கிக்கும் இடையே நடந்த மோதலின்போது, ஸ்டாலின் உயிருடன் இருக்கும் வரை,கம்யூனிஸ்ட் இயக்கம்பெரும்பாலும்ஸ்டாலினை ஆதரித்தது. ஒவ்வொரு முறை ஸ்டாலினுக்கு சளி பிடித்து தும்மும்போதும் சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்கம் தனது கைக்குட்டையை வெளியே எடுத்தது. ஆனால்,ஸ்டாலினின் மரணத்திற்குப் பிறகு,ஸ்டாலின் அம்பலப்படுத்தப்பட்டவுடன் அதே தோழர்கள், "ட்ரொட்ஸ்கியோடு நம்மை அடையாளப்படுத்திக் கொள்ளமுடியாது. (ஸ்டாலினுக்கு எதிராக ட்ரொட்ஸ்கி போராடியிருந்தாலும்) ஒரு ஸ்டாலினிஸ்ட் அல்லாத, ட்ரொட்ஸ்கியிஸ்ட்டும் அல்லாத ஒருவரை நாம் கண்டுபிடிக்க வேண்டும்." என்றார்கள். அவர்கள் கவனமாகசுற்றிப் பார்த்தார்கள், அவர்கள் அதிர்ஷ்டசாலிகள்.

இத்தாலிய சிறையில் ஒரு நபர் இருந்தார். அவர் சிறையில் இருந்ததால் தினசரி கருத்து மோதல்களிலிருந்து அவர் ஒதுங்கியே இருந்தார். இந்த மனிதர் கிராம்சி. எனவே, கிராம்சியை முன்னுதாரணமாகக் கொண்டு, "நாங்கள் ஸ்டாலினிஸ்டுகள் அல்ல, ட்ரொட்ஸ்கிஸ்டுகளும் அல்ல, நாங்கள் கிராம்சிஸ்டுகள்!" என்றார்கள்.




மார்க்ஸ், ஏங்கெல்ஸ் இடையேயும் இதையே செய்ய இவர்கள் முயற்சிக்கின்றனர். மார்க்ஸைத் தாக்குவது மிகக்கடினம். பதிலாக அவருக்கும் ஏங்கெல்ஸுக்கும் இடையே வேறுபாடுகளைத் தேடுகிறார்கள். ஏங்கெல்ஸ் ஒரு நடைமுறை மனிதர் என்பதைக் கவனிக்கும் அவர்கள், மார்க்சை ஒரு கோட்பாட்டாளர், நடைமுறைவாதி அல்ல என்கிறார்கள். மார்க்சியத்துடன் உடன்படுவதாகக் கூறும் அவர்களின் உலகில் மார்க்சியம் என்பது வெறும் அருவமானது (abstract) மட்டுமே. உபரி மதிப்பை சராசரி லாப விகிதமாக மாற்றும் பகுப்பாய்வு மூலதனத்தின் தொகுதி மூன்றில் உள்ளது. அவர்கள் போராட்டத்தில் ஆர்வம் காட்டுவதை விட, கணக்கீடுகளிலும் கணிதத்திலும் அதிக ஆர்வம் காட்டுகின்றனர். இப்படித்தான் மார்க்சையும் ஏங்கெல்ஸையும் அவர்கள் வேறுபடுத்திக் காட்டுகிறார்கள். ஆனால், அவர்கள் இருவரும் அவ்வளவு ஒற்றுமையானவர்கள். கருத்தியல் ரீதியாக அவர்கள் இருவரையும் நீங்கள் பிளவுபடுத்திவிட முடியாது. இருவரும் ஒருவரையொருவர் அறிவூப்பூர்வமாகத் தங்களை நிரப்பிக்கொண்டவர்கள்.

அப்படியிருந்தும், ஏங்கெல்ஸ் சில பகுதிகளில் மார்க்ஸிடமிருந்து முற்றிலும் சுதந்திரமாக நிற்கும் பங்களிப்பைச்செய்தார். எடுத்துக்காட்டாக, 1884இல் (சரியாக மார்க்ஸ் இறந்து ஒரு வருடம் கழித்து) ஏங்கெல்ஸ் எழுதிய 'குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' என்னும் நூல். இது ஒரு அற்புதமான பங்களிப்பாகும், ஏனென்றால், இப்படைப்பில் அவர் ஒரு புதிய பொருளைக் கையாளுகிறார். மார்கஸ், வேறு சில அறிஞர்கள் பயன்படுத்திய மானுடவியலை ஏங்கெல்ஸ் பயன்படுத்துகிறார். ஒரு எளியக் கேள்வியைக் கேட்கிறார்: தனிப்பட்ட மனித உறவுகள் என்பது என்ன? குடும்பம் என்பது என்ன? ஆணுக்கும் பெண்ணுக்குமான உறவு என்பது என்ன? அவை புனிதமானவையா?

பல விஷயங்கள் இப்போது மாற்றம் கண்டுள்ளன. உதாரணமாக, முன்பு அடிமைத்தனம் இருந்தது - இப்போது அடிமைத்தனம் இல்லை, மாறாக கூலி உழைப்பு இருக்கிறது. ஆனால், மனிதர்களுக்கிடையேயான உறவுகள் மட்டும் சுதந்திரமானவையாகவும் மாற்றத்திற்கு அப்பாற்பட்டவையாகவும் இருக்கின்றன. மனித இயல்பு நிலையான ஒன்று. மனித இயல்பு என்பது வரலாற்று நிலையின் ஒரு பகுதி என்பதை ஏங்கெல்ஸ் முற்றிலும் தெளிவுபடுத்தினார். மிக எளிமையாகச் சொன்னால் - பேராசையின் தன்மையைப் பாருங்கள். நான் பாலஸ்தீனத்திலிருந்து வருகிறேன். பாலஸ்தீனத்தில் பால்காரர் வந்த பிறகு யாரும் வீட்டுக்கு வெளியே பாலை விட்டு வைத்திருக்கமாட்டார்கள். காரணம், வெயில் அதிகமாக இருப்பதால் பால் புளித்துப் போவது மட்டுமல்ல, மக்கள் திருடிச் சென்றுவிடுவார்கள் என்பதற்காகவும்தான். இப்போது பிரித்தானியாவில் யாராவது வந்து டி.வி டெலிவரி செய்ய கதவைத் தட்டினால் அங்கு யாரும் இல்லை என்று தெரிந்தால் டிவியை வெளியில் வைத்துவிட்டு வரமாட்டார். ஆனாலும் பால்காரர் பாலை வெளியே விட்டுவிட்டுச்செல்கிறார். இதிலிருந்து டிவி திருடுவது மனித இயல்பு என்று சொல்கிறீர்கள், ஆனால், பால் திருடுவது மனித இயல்பு அல்ல. ஆனால், இது மனித இயல்புடன் ஒப்பிடுவதற்கு ஒன்றும் இல்லை - இது சூழ்நிலைகளைப் பொறுத்தது. பால் மலிவானது - ஒப்பீட்டளவில் நிறைய பால் உள்ளது. தொலைக்காட்சிப் பெட்டிகள் அதிகம் இல்லை. குடும்பத்தை, குடும்ப உறவுகளைப் பொருத்து,

அவைகள் வர்க்கச் சமூகத்தில் வேரூன்றியுள்ளது என்பதை விளக்கினார். குடும்பம் என நாம் அழைக்கும் நிலை ஒரு தனிச்சொத்து என்கிறார் ஏங்கெல்ஸ். குடும்பத்தில் ஏற்படும் அனைத்து மாற்றங்களும் இதனால் பாதிக்கப்படுகிறது என்பதை 'குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' என்னும் தனது சிறிய நூலில் அற்புதமாக எடுத்துக் காட்டியுள்ளார்.

கடைசியாக ஓரிரு கருத்துகளை முடிவான கருத்துகளாக உரைக்கிறேன். நான் இதுவரை பேசியது ஏங்கெல்ஸின் கருத்துகளைப் பற்றிதான். ஆனால், ஏங்கெல்ஸ் ஒரு செயல் திறன் கொண்டவர் என்பதை நினைவில் கொள்ளாமல் நீங்கள் ஏங்கெல்ஸைப் பற்றிப் பேச முடியாது. மார்க்சின் குடும்பத்தில் அவர் என்னவாக அழைக்கப்பட்டார் தெரியுமா? 'ஜெனரல்' என்றே அவர் அழைக்கப்பட்டார். அவர் ஏன் அப்படி அழைக்கப்பட்டார்? பதில் என்னவென்றால், மார்க்ஸ் பல அற்புதமான கட்டுரைகளை (1848இல்) எழுதிக் கொண்டிருந்தபோது, ஏங்கெல்ஸ் போராட்டக்களத்தின் தடுப்புகளுக்குப் பின்னால் இருந்தார். தன் வாழ்நாள் முழுவதும், ஏங்கெல்ஸ் ஒரு செயல்வீரனாகவே இருந்தார்.

ஏங்கெல்ஸ் செயல்திறன் கொண்டவராக இருந்தபோதிலும், களத்திற்கு வெகு அப்பாலிருந்து மார்க்ஸ் அடைந்த தெளிவான பாடத்தை ஏங்கெல்சினால் பெறமுடியவில்லை. கோட்பாடானது களச்செயல்பாட்டின் மூலம் மட்டுமே நேரடித் தொடர்பு கொண்டு உருவாகிறது என்று நான் கூறவில்லை. களச் செயற்பாட்டில் நீங்கள் நெருங்கியத் தொடர்பு கொண்டிருந்தாலும், கோட்பாட்டை உருவாக்கும் இடத்திலிருந்து வெகு தொலைவிலேயே இருப்பீர்கள். கோட்பாட்டு உருவாக்கத்திற்குத் தேவையான தூரம் மார்க்சுக்குக் கிடைத்தது. ஏங்கெல்ஸ் அவ்வாய்ப்பினை சில சமயங்களில் தவறவிட்டுவிடுவார். உதாரணமாக, அமெரிக்க உள்நாட்டுப் போரில், வடக்கு, தெற்குப் பகுதிகளுக்கு இடையே நடைபெற்ற சண்டையில், தெற்கு வெற்றி பெறும் என ஏங்கெல்ஸ் நினைத்தார். அதற்கு ஏங்கெல்ஸ் பலகாரணங்களை முன்வைத்தார். தெற்கின் ராணுவம் மிகச்சிறப்பாக ஒருங்கிணைக்கப்பட்டது என்றார். அது முற்றிலும் உண்மை. பிரிட்டனில் இருந்த சாண்ட்ஹர்ஸ்ட் ராணுவக் கல்லூரி போன்ற அதி உயர்தரமான ராணுவக் கல்லூரிகள் தெற்குப் பகுதியில்தான் இருந்தன. சிறந்த தளபதிகளும் தெற்கில் இருந்தனர். தொடக்கம் முதலே தெற்கின் கையே ஓங்கி இருந்தது. இருப்பினும் வடக்கு வெல்லும் என மார்க்ஸ் அனுமானித்தார். மார்க்ஸ் சொன்னார்: அடிமை முறை உழைப்பை விட கூலி முறை உழைப்பு அதிக உற்பத்தித் திறன் கொண்டது. நீங்கள் கவனிக்க வேண்டிய முதல் விஷயம் இதுதான். எனவேதான் டெக்சாஸை விட நியூயார்க் முன்னேறியுள்ளது, எனவே, வடக்கு வெல்லப்போகிறது. அது மட்டுமல்ல. சமூகத்தின் மிகவும் ஒடுக்கப்பட்ட பிரிவினரைப் பாருங்கள் - அவர்கள் கறுப்பின அடிமைகள். அவர்கள் எங்கு ஓடினார்கள், எங்கிருந்து ஓடினார்கள்? அவர்கள் வடக்கிலிருந்து தெற்கு நோக்கிச் சென்றார்களா அல்லது தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் சென்றார்களா? தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் சென்றார்கள். அவர்கள் வடக்கைதேர்வு செய்தார்கள். எனவேதான் அனைத்து தொழில்நுட்ப, இராணுவ நிபுணத்துவத்தை ஏங்கெல்ஸ் பெற்றிருந்தபோதிலும், மார்க்ஸ் மிகச்சரியாகக் கணித்தார். ஏங்கெல்சின் கணிப்பு பொய்த்துப்போனது.

இந்த விவாதத்தின் நோக்கம் என்ன? உலகின் மிக மோசமான விஷயம் என்பது உலகின் புகழ்மிக்க அறிஞர்கள், ஞானிகளின் ஊதிப்பெருக்கப்பட்ட வாழ்க்கை வரலாற்று பிம்பங்கள்தான். ஏங்கெல்சுக்கு எல்லாம் தெரியும், அவர் எப்போதும் சரியானவர்தான் என்று நான் சொல்கிறேன் என்றால் நான் ஒரு முட்டாள். மார்க்ஸ் எப்பொழுதும் முற்றிலும் சரியானவர் என்று சொல்வது அதைவிடவும் மோசமானது. ஸ்டாலினின் ஆட்சிக்காலத்தில் ரஷ்ய வரலாற்றுப் புத்தகங்களில் லெனினைப் பற்றி எழுதப்பட்டதைப் பற்றிச் சிந்தியுங்கள். லெனின் எப்போதுமே சரியானவர் மட்டுமல்ல, அவருடைய தந்தையும் ஒரு போராளி, முற்போக்குவாதி! உண்மை என்னவென்றால், அவரது தந்தை ஜாரின் மூலம் நன்மதிப்புப் பட்டம் பெற்றவர் (Knighthood). 1881இல் அலெக்சாண்டர் மிமி கொல்லப்பட்டபோது, லெனினின் தந்தை என்ன செய்தார் என்று நினைக்கிறீர்கள்? அவர் ஜாரின் ஆத்மா சாந்தியடைய தேவாலயத்திற்குச் சென்றார். ஆனால், ஆனால், ஊதிப் பெருக்கப்பட்ட வாழ்க்கை வரலாற்று பிம்பங்களைப் பற்றுபவர்கள் இதை ஒப்புக்கொள்ள முடியாது. ஏனென்றால், புனிதர்களிடமிருந்து மட்டுமே புனிதர்கள் பிறந்திருக்க முடியும். பிறக்க வேண்டும். ஆகவே, டோனி கிளிஃப், ஏங்கெல்ஸை மிகவும் அற்புதமாகச் சொன்னார் என்றும், அவர் தவறேதும் செய்யவில்லை என்றும் நினைத்து மக்கள் இந்தக் கூட்டத்தில் இருந்து வெளியேறுவதை நான் விரும்பவில்லை. அது முட்டாள்தனமானதாக இருக்கும்.

ஏங்கெல்ஸைப் பற்றிய ஒரு நல்ல விஷயம் என்னவென்றால், அவர் மிகவும் சுறுசுறுப்பாக இருந்தார். மார்க்ஸ் உயிருடன் இருந்தபோதும் சரி, அதைவிட முக்கியமானது மார்க்ஸ் இறந்த பிறகும் சரி, ஏங்கெல்ஸ் சுறுசுறுப்பாக இருந்தார். 1883, 1895க்கு இடையில், மார்க்ஸ் இறந்த பிறகான இந்த 12 ஆண்டுகளில், உலகம் முழுவதிலுமிருந்து புரட்சியாளர்கள், தொழிற்சங்கவாதிகள் ஏங்கெல்ஸைத் தொடர்புகொண்டு ஆலோசனை கேட்டார்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஏங்கெல்ஸ் தன்னாலான அறிவுரையை வழங்குவதில் முற்றிலும் தாராளமாக இருந்தார். அவர் பிரெஞ்சு சோசலிச இயக்கத்திலும் ஜெர்மனியிலும் ரஷ்யாவிலும் பிரிட்டனிலும் உலகின் ஒவ்வொரு வெகுஜன

இயக்கத்திலும் தனது பங்களிப்பை செய்தார்.

அவர் வெறும் சொல்லால் மட்டும் சர்வதேசியவாதி அல்ல. நடைமுறையில் ஒரு சர்வதேசியவாதியாக வாழ்ந்தார். அவரின் வாசிப்புப் பழக்கத்தை நீங்கள் அறிந்திருப்பீர்கள். அவர் தினமும் படித்தவற்றின் பட்டியல் என்னிடம் உள்ளது. அவர் தினமும் ஏழு தினசரிகளை வாசிப்பார். ஜெர்மன் மொழியில் மூன்று, ஆங்கிலத்தில் இரண்டு, ஒரு ஆஸ்திரியன், ஒரு இத்தாலியன் மற்றும் பல்வேறு மொழிகளில் 19 வார இதழ்கள். ஏங்கெல்சுக்கு 29 மொழிகள் தெரியும். ஒரு மொழியைப் படிப்பது அதை பேசுவதை விட எளிதானது. ஏங்கெல்ஸுக்கு 29 மொழிகளைப் பேசத் தெரியும் என்று நான் சொல்லவில்லை, ஆனால், என்ன நடக்கிறது என்பதை அறிய விரும்பியதால், அவரால் அவற்றைப் படிக்க முடிந்தது. ரஷ்யர்கள் என்ன செய்கிறார்கள் என்பதை அறிய விரும்பினார். அந்த நேரத்தில் ஒரு சில ரஷ்ய சோசலிஸ்டுகள் மட்டுமே இருந்தனர். நீங்கள் ரஷ்ய மொழியைப் படிக்காவிட்டால் அந்நாட்டின் சோசலிஸ்ட் இயக்கத்தைப் பின்பற்ற முடியாது. எனவே, அதற்காக அவர் ரஷ்ய மொழியை சிறப்பாகப் படித்தார். இது மிகப்பெரும் சாதனை.

எடுத்துக் கொண்ட பணியில் அவருடைய பங்களிப்பும் அதன் மீதான அர்ப்பணிப்பும் வியக்கத்தக்கது. இவற்றை ஏங்கெல்ஸின் சொந்த வார்த்தைகளிலேயே சுருக்கமாகக் கூறலாம். மார்க்சின் கல்லறையில் அவர் ஆற்றிய உரை இது:




> *எல்லாவற்றிற்கும் மேலாக மார்க்ஸ் ஒரு புரட்சியாளர். முதலாளித்துவ சமூகத்தையும் அது கொண்டு வந்திருக்கும் அரசு நிறுவனங்களையும் தூக்கியெறிவதில் ஏதோ ஒரு வகையில் பங்களிப்பதே அவரது உண்மையான பணியாக இருந்தது. கிளர்ச்சியே அவரது அங்கமாக இருந்தது.*

இப்போது இந்த வார்த்தைகள் ஃபிரடெரிக் ஏங்கெல்ஸுக்கும் சரியாகப் பொருந்தும். ஏங்கெல்ஸ் ஒரு போராளி. அவர் ஒரு அருவமான விஞ்ஞானி அல்ல. அவரது விஞ்ஞானம் சோசலிசத்திற்கானப் போராட்டத்தில் ஒரு ஆயுதமாக இருந்தது. கோட்பாட்டுக்கும் நடைமுறைக்குமான ஒற்றுமை என்பது சில சமயங்களில் முன்வைக்கப்படுவதுபோல கோட்பாடு என்பது யாரோ ஒருவர் புத்தகத்தை எழுதுவதும், நடைமுறை என்பது நீங்கள் அப்புத்தகத்தை வாசிக்கிறீர்கள் என்பதும் அல்ல. கோட்பாட்டுக்கும் நடைமுறைக்குமான ஒற்றுமை என்பது கோட்பாட்டோடு வர்க்கப் போராட்டத்தை ஐக்கியப்படுத்துவது மட்டுமே.

கட்சியானது, பாட்டாளி வர்க்கத் தோழர்களுக்கு பாடம் நடத்துவது என்று முன்வைக்கப்படும் கருத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. கட்சி என்றால் என்ன? ஆசிரியருக்கு யார் கற்பிப்பது? இயங்கியல் என்பதை இருவழிப் பாதையாகக் கொள்ளமுடியும். கோட்பாடு, தனித்த நிலையில் முற்றிலும் பயனற்றது. நடைமுறை மட்டும் என்பதும் குருட்டுத்தனமானது. உண்மையில் நடைமுறை என்பது கோட்பாட்டிற்கு முந்தியது. நியூட்டன் ஈர்ப்பு விதியைக் கண்டுபிடிப்பதற்கு முன்பும் ஆப்பிள்கள் மரத்திலிருந்து கீழே விழத்தான் செய்தன. அதன்பிறகுதான், ஆப்பிள் எப்படி கீழ்நோக்கி விழுந்தன என்னும் விளக்கக் கோட்பாட்டை நியூட்டன் கண்டுபிடித்தார். பயிற்சி எப்போதும் கோட்பாட்டிற்கு முந்தையது. ஆனால், கோட்பாடுதான் நடைமுறையைப் பலப்படுத்த முடியும்.

மார்க்சிஸ்ட்கள் வெறுமனே நடைமுறை வாதிகளோ கோட்பாட்டுவாதிகளோ அல்லர். தத்துவார்த்தமும் நடைமுறையையும் சார்ந்தவர்கள். நடைமுறை என்பதை மிக முக்கியமான விஷயமாக ஏற்பவர்கள். குறுகிய காலத்திற்கும் நீண்ட காலத்திற் கும் நடைமுறை முடிவுகள் எப்படி இருக்கும் என்ற அடிப்படையில் மார்க்சிஸ்ட்களின் செயல்பாட்டை மதிப்பிடுங்கள். நீங்கள் எங்களை விரும்புவதால் எங்களை ஆதரிக்காதீர்கள். எங்களை சோதனைக்கு உட்படுத்துங்கள். உழைக்கும் வர்க்க செயல்பாட்டின் இறுதி விளைவு அவ்வர்க்கத்திற்கான விடுதலை என்பதால், உங்களை நீங்களே சோதனைக்கு உட்படுத்திக் கொள்ளுங்கள். வர்க்கப் போராட்டம் தொடர்பானவை தவிர, கோட்பாடுகளால் வேறெந்தப் பயனும் இல்லை.

தற்போது தொழிற்சங்கங்களில் நடக்கும் போராட்டத்துடன் கோட்பாட்டை எவ்வாறு தொடர்புபடுத்த முடியும், பாசிசத்திற்கு எதிரானப் போராட்டம் கோட்பாட்டோடு எத்தகைய தொடர்பைக் கொண்டுள்ளது, வேலை வாய்ப்பின்மைக்கு எதிரானப் போராட்டத்துடன் கோட்பாடு எப்படி தொடர்புடையது, தற்போது செச்சினியாவில் நடக்கும் போருடன் இது எவ்வாறு தொடர்புடையது என்பவைதான் இப்போதைய பிரச்சினை. வேறு வார்த்தைகளில் கூறுவதானால், மார்க்சியம் எப்போதும் செயல்பாட்டிற்கு வழிகாட்டியாக இருக்கிறது, எல்லாவற்றிற்கும் மேலாக ஏங்கெல்ஸ் ஒரு நடைமுறை மனிதராகவே வாழ்ந்தார்.

Tony Cliff (1917 – 2000). ஒரு பிரிட்டிஷ் மார்க்சிய அறிஞர். சோசலிஸ்ட் தொழிலாளர் கட்சியின் நிறுவனர். தற்போதைய பாலஸ்தீனத்தில் யூதக்குடும்பத்தில் பிறந்தவர். இயற்பெயர் இகேல் க்ளக்ஸ்டீன். அரச முதலாளித்துவம் என்னும் தத்துவத்தை உருவாக்கியதற்காகப் பெரிதும் அறியப்படுகிறார். அவர் ஒரு ட்ராட்ஸ்கியவாதியாக இருந்தபோதிலும் சோவியத் அரசின் பொருளாதாரக் கொள்கைகள் குறித்து அவரோடு கருத்து மாறுபாடு கொண்டவர். சோவியத் ஒன்றியத்தின் கம்யூனிச அரசு ஒரு முதலாளி வர்க்கமாக செயல்பட்டதாக அவர் வாதிடுவார். ஏகாதிபத்தியம், சோவியத் ஒன்றிய அரசின் இயல்பு மற்றும் புரட்சிகர சோசலிச அரசியல் குறித்த அவருடைய ஆய்வுகளும் தத்துவங்களும் மிக முக்கியமான பங்களிப்புகள். 'மார்க்சியம் 1996' கருத்தரங்கில் எங்கெல்ஸ் குறித்து டோனி கிளிஃப் ஆற்றிய முழுமையான ஆங்கில உரையை https://www.marxists.org/archive/cliff/works/1996/07/engels.htm என்னும் சுட்டியில் வாசிக்கலாம்.

---

*அடிக்குறிப்புகள்:*

*3.* Second Fiddle *என்னும் சொல்லுக்கு ஏராளமான தமிழ்ச் சொற்களை கண்டடைந்தபோதிலும், துணைவன் என்னும் சொல்லையே உபயோகப்படுத்தியிருக்கிறேன். பரிசீலிக்கப்பட்ட பிற சொற்கள் வருமாறு: இரண்டாம் குரல், பக்கவாத்தியம், வழிமொழிபவன், ஒத்து ஊதுபவர், ஒத்த சிந்தனையாளர்.*

*4. மார்க்சுக்கு முன்பே தொழிலாளி வர்க்கம் பற்றிய நேரடியான அனுபவத்தைப் பெற்றிருந்தவர் ஏங்கெல்ஸ்தான். அதற்கு சாட்சியமாக விளங்குவதுதான் அவர் 1844இல் எழுதிய 'இங்கிலாந்தில் தொழிலாளி வர்க்கத்தின் நிலைமை. நேரடியான அவதானிப்புகளிலிருந்தும் உண்மையான தரவுகளிலிருந்தும்'* (The Condition of Working Class in England. From Personal Observation and Authentic Sources) *என்ற நூல். 1842 - 44ஆம் ஆண்டுகளில் இங்கிலாந்தில் அவர் பெற்றிருந்த அனுபவம், ஆய்வுகள் ஆகியவற்றின் அடிப்படையில் எழுதப்பட்டு 1845இல் ஜெர்மன் மொழியில் வெளிவந்த அந்த நூலின் ஆங்கில மொழியாக்கம் 1887இல்தான் வெளியாயிற்று.*

*5. கம்யூனிஸ்ட் கழகத்தின் இரண்டாவது பேராயம், 1847 ஆம் ஆண்டு நவம்பர் 29 முதல் டிசம்பர் 8 வரை நடைபெற்றது. அந்தக் கழகத்தின் செயல்திட்டத்தை வரையும்படி அந்தப் பேராயம் மார்க்ஸ், ஏங்கெல்ஸ் ஆகியோரை அறிவுரைத்தது. இந்த முடிவின்படி கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை ஜனவரி 1848இல் எழுதப்பட்டது.*

*6. பாரிஸ் கம்யூன்* (Paris Commune) *என்பது 1871 மார்ச் 18 முதல் மே 28 வரையிலான காலப்பகுதியில், பாரிஸ் நகரில் நடைபெற்ற முதல் பாட்டாளி வர்க்க சர்வாதிகார ஆட்சியாகும். இது, 1870 - 71ஆம் ஆண்டு நடந்த பிரான்சு - பிரஷ்யா போரின் பின்னரும், அதனைத் தொடர்ந்து உருவான அரசியல் நிலைமைகளின் விளைவாகவும், பாரிஸ் நகரில் பொதுமக்கள் மற்றும் தொழிலாளர்கள் தலைமையிலான ஒரு ஆட்சி அமைக்கப்பட்டது. பாரிஸ் கம்யூன், அதன் வரலாற்றில் முக்கியமான இடத்தைப் பெற்றது, ஏனெனில் இது தொழிலாளர் வர்க்கத்தின் முதல் அரசியல் ஆட்சி முயற்சியாகவும், சமூக நீதி, சமநிலைக்கான போராட்டத்தின் அடையாளமாகவும் விளங்கியது. இந்த ஆட்சி மக்களின் வாழ்வாதார மேம்பாடு, வேலை நேரக் குறைப்பு, கல்வி மற்றும் பண்பாட்டு மேம்பாடு போன்ற நல்வாழ்வு நடவடிக்கைகளைக் கொண்டு வந்தது. இருப்பினும், இது வெகு நாட்கள் நீடிக்கவில்லை. மேமாதத்தின் இறுதியில் கம்யூனின் ஆட்சி முடிவுக்கு வந்தது. மார்க்சியம், சமூகநீதி, பாட்டாளி வர்க்க சர்வாதிகார ஆட்சிமுறை எப்படி இருக்கவேண்டும் என்பது தொடர்பான ஆய்வுகளில் பாரிஸ் கம்யூன் நிகழ்வு மிக முக்கிய இடத்தை வகிக்கிறது.*

*7. 1830களிலும் 1840களிலும் குறிப்பிட்ட சில உரிமைகளை வழங்குமாறு பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கோரும் சாசனத்தை முன்வைத்துப் போராடிய தொழிலாளி வர்க்க இயக்கம்தான் சார்டிஸ்ட்* (Chartists) *இயக்கம்.*

*8. சார்லஸ் டிக்கன்ஸ்* (Charles Dickens) *பிரபலமான ஆங்கில எழுத்தாளர், சமூக சீர்திருத்தவாதி. அவர் 19ஆம் நூற்றாண்டின் விக்டோரியன் யுகத்தில் வாழ்ந்தவர். டிக்கன்ஸ் தனது புனைகதை நாவல்களுக்காக மிகவும் அறியப்படுபவர். தனது எழுத்துகளில் சமூக அவலங்களை சித்தரிப்பதில் திறமை வாய்ந்தவர். ஏ க்ரிஸ்மஸ் காரோல்* (A Christmas Carol), *ஒலிவர் ட்விஸ்ட்* (Oliver Twist), *டேவிட் காப்பர்ஃபீல்ட்* (David Copperfield), *ப்ளீக் ஹவுஸ்"* (Bleak House) *ஆகியன அவரது முக்கிய படைப்புகள். அவரது கதைகள் பெரும்பாலும் வறுமை, சமூக சமத்துவம், மனித உணர்வுகளை மையமாகக் கொண்டு எழுதப்பட்டன. தனது எழுத்துக்களின் மூலம் வறுமை, தொழிலாளிகளின் நிலைமை, குழந்தை உழைப்புக்கு எதிரான கருத்துகளைப் பரப்பியவர்.*

*9. டோனி பிளேயர் - இங்கிலாந்தின் முன்னாள் பிரதமர். 1997 - 2007 காலத்தில் பிரதமர் பதவி வகித்தவர். தொழிலாளர் கட்சியைச் சேர்ந்தவர்.*

*10. ஜான் மேஜர் - இங்கிலாந்தின் முன்னாள் பிரதமர். 1990 - 1997இல் பிரதமர் பதவி வகித்தவர். கன்சர்வேடிவ் கட்சியைச் சேர்ந்தவர்.*

"செ. சண்முகசுந்தரம்"
<c.shanmughasundaram@gmail.com>

# குமைச்சல்

**அருள்ஜோதி முரளிதரன்**

**ஓவியம்: சீதாராம் பட்டீல்**





குப்புறக் கிடக்கிற
வீடுகளின் முதுகின் மீது
கூரிய நகங்களால்
குத்திக் கிழித்துக்
கொண்டிருக்கிறது இருள்

மொத்த இருளை
அள்ளி
கூடையில்
வீசுகிறாள்
துப்புரவுக்காரி

வீதியின் மவுனத்தை
கதவில் தொங்கும்
பைகளில்
அடைத்துச் செல்கிறார்
பால்காரர்

புலரியின் பிரதிகளை
ஒவ்வொரு
வாசலிலும்
வீசிச் செல்கிறான்
பேப்பர் பையன்!

தனிமையின்
குமைச்சலை
விறக்காக்கி
அடுப்பு மூட்டத்
துவங்குகிறாள்
பெண்ணொருத்தி!

தகனத்தில்
திடுமென விழித்து
வெளிச்சம் வரைய
ஆரம்பிக்கிறான்
அயர்ச்சிலிருக்கும்
சூரியன்!

அருள்ஜோதி முரளிதரன் <aruljoewin1@gmail.com>

# அப்துல்ரஸாக் குர்னாவின் போரொழிந்த வாழ்வு

## சரவணன் மாணிக்கவாசகம்

குர்னா 2021ஆம் ஆண்டு இலக்கியத்திற்கான நோபல் பரிசைப் பெற்றவர். இந்த நாவல் இவரது சிறந்த நாவல்களில் ஒன்று.

கயல் அரசு கலைக்கல்லூரியில் உதவிப் பேராசிரியர். அடிப்படையில் கவிஞர். ஐந்து கவிதைத் தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். 'கனவு இல்லம்: அமெரிக்கச் சிறுகதைகள்', 'பழைய துர்தேவதைகளும் புதிய கடவுளரும்: சமகாலத் திபெத்தியச் சிறுகதைகள்' என இவரது இரண்டு மொழிபெயர்ப்புச் சிறுகதைத் தொகுப்புகள் ஏற்கனவே வெளியாகியுள்ளன. இது இவரது முதல் நாவல் மொழிபெயர்ப்பு.



குர்னாவின் இந்தப் புதிய நாவல் கிழக்கு ஆப்பிரிக்காவில் ஜெர்மானியக் காலனித்துவத்தின் விளைவுகள் குறித்துப் பேசுகிறது. ஜெர்மானியர்கள் குறித்த தெளிவான சித்திரம் நாவலில் வருகின்றது. உதாரணத்திற்கு அவர்கள் அனைத்தையும் ஆவணப்படுத்துவது. யூதர்களைக் காட்டிக் கொடுத்தவர்களுக்குக் கொடுத்த தரகுத் தொகைக்கான சிட்டைகளை அவர்கள் அவசரமாக அழித்ததில் மிஞ்சியவை ஏராளம். நாவலில் ஜெர்மானியப் படை வீரன் சொல்வது போல் எதிரிகளுக்குப் பயத்தை ஏற்படுத்துவதே அவர்கள் அடக்கியாளும் வழி.

ஜெர்மானியருடன் ஆங்கிலேயப் படைகள் துவந்த யுத்தம் செய்கின்றன. அந்தப் படையில் கணிசமான அளவு இந்தியர்கள். யாருக்கான போரில் யார் ஈடுபடுவது? அன்றன்றைக்கான உணவுக்காக மற்ற எல்லாவற்றையும் விட்டுக் கொடுப்பதில் சமர்த்தர்கள் இந்தியர்கள்.

ஒருவகையில் இந்த நாவல் முந்தைய நாவலான 'சொர்க்கத்தின் பறவைகள்' நாவலின் தொடர்ச்சி. அதன் முடிவைச் சட்டென முடித்துவிட்டோமோ என்று குர்னாவுக்குத் தோன்றியிருக்கக் கூடும். ஆனால், இந்த நாவலின் கடைசிப் பகுதியிலும் ஹோட்டலில் இடம் காலியாவதற்காகத் தன் முதுகுக்குப் பின்னால் பதற்றத்தோடு நெடுநேரம் காத்திருப்பவருக்கு இடம்விடவேண்டி, தனக்குக் கடைசியாக வந்த காப்பியைத் தூக்கிக்கொண்டு எழும் அவசரம் தெரிகிறது.



பெரிய கதையில் பல குட்டிக் கதைகளை அடங்கிய தொனியில் சொல்லிப் போவது குர்னாவின் பாணி. ஆஷாவின் ஆவி அஃப்பியாவைப் பிடிக்கையில் அவள் இலியாஸைத் தொடர்ந்து தேடுவதில் ஒரு குட்டிக் கதை ஒளிந்திருக்கிறது. குர்னா பதினெட்டு வயதில் அகதியாக இங்கிலாந்தில் நுழைந்தவர், வியாபாரக் குடும்பத்தைச் சேர்ந்தவர். எனவே, அகதி வாழ்வும் வியாபாரமும் இவரது கதைகளில் அடிக்கடி வருகின்றன.

குர்னா நோபல் பரிசை வெல்லும்போது






அவரது நாவல்களின் ஆங்கிலப் பிரதிகள் உலகின் பெரும்பாலான இடங்களில் கிடைக்கவில்லை. எதிர் பதிப்பகம் இவ்வளவு விரைவில் அவரது முக்கியமான மூன்று நாவல்களைத் தமிழில் கொண்டு வந்திருப்பது பாராட்டத்தக்கது. இன்னும் Desertion மட்டுமே மீதமிருக்கிறது.

கயலின் மொழிபெயர்ப்பு மிக அழகாக வந்திருக்கிறது. ஆங்கிலத்தில் இந்த நூலை முன்பே படித்திருந்ததால் அதை மொழிபெயர்ப்பதில் உள்ள சவால்களை நன்கறிந்தவன் என்கிற முறையில் இந்த நூல் தங்கு தடையற்ற வாசிப்பு அனுபவத்தைத் தருகிறதென்றேகூறுவேன்.கயலுக்குவார்த்தைப்பஞ்சம் எப்போதுமே இருந்ததில்லை என்பது அவருடைய முந்தைய கவிதைத் தொகுப்புகளான 'கல்லூஞ்சல்', 'மழைக் குருவி', 'ஆரண்யம்', 'உயிரளபெடை – ஆதிவாசிகள் நிலத்தில் போன்சாய்' ஆகியவற்றை வாசித்தவர்களுக்கு ஏற்கனவே தெரிந்திருக்கும். இவருடைய மொழிபெயர்ப்பு அருமை என்று சொல்லாமல் சராசரி என்று யாரேனும் சொன்னால் மட்டுமே நான் ஆச்சரியப்படுவேன்.

சரவணன் மாணிக்கவாசகம்
<sarakavivar@gmail.com>

---

போரொழிந்த வாழ்வு - அப்துல்ரஸாக் குர்னா-; தமிழில்: கயல்; விலை ரூ. 550; எதிர் வெளியீடு, தொலைபேசி: +91 99425 11302

# ஏஞ்சல்

**மோகன் சுப்ரமணியன்**

மதியம் 2 மணி.

வேலைக்குச் சேர்ந்த இரண்டு வருடங்களில் இந்த நேரத்தில் பஸ்சுக்காக காத்திருக்க நேரிட்டதில்லை. ஒன்று ஆபிஸ் வரவேண்டியது இருக்கும், இல்லாவிட்டால் இருக்காது. வர வேண்டி இருந்தால் மாலை 5 மணிக்கு கிளம்ப முடியாது. நேரக் கட்டுப்பாடு ஒரு காரணம், கூட்டம் இன்னொரு காரணம். இந்த இண்டஸ்ட்ரியல் ஏரியாவில் பெரும்பாலான நிறுவனங்கள் இரண்டரையில் இருந்து நாலரைக்குள் மூடிவிடும். பஸ்சுக்கு செல்ல பெரும் கூட்டமே காத்திருக்கும்.

இன்டர்வியூவுக்கு சூட் போட்டுக்கொண்டு வந்தபோது பஸ்ஸில் எல்லோரும் வித்தியாசமாகப் பார்த்தனர். வந்த பிறகுதான் தெரிந்தது இந்த இடத்துக்கு சூட் எவ்வளவு அந்நியமான உடை என்று.

இந்த இடத்தில கொண்டு வந்து கணினி நிறுவனத்தைத் தொடங்கும் எண்ணம் யாருக்கு வந்திருக்கும்?

சுற்றிலும் ஏழு இளைஞர்கள். உபகரண பெட்டிகளை வட்டமாக போட்டு அதன் மீது அமர்ந்து சத்தமாக பேசிக் கொண்டிருக்கிறார்கள். அருகே இருக்கும் ஏதோ நிறுவனத்தில் பணிபுரிகிறவர்களாக இருக்கும். ஒவ்வொருவரின் மடியிலும் மஞ்சள் நிற ஹெல்மெட் தலைகீழாகக் கவிழ்ந்திருந்தது. ஒன்றில் மெக்டொனால்ட் உணவுப் பொதி. மகனோ மகளோ காத்திருப்பார்கள்.

தொலைவில் பஸ் வருவது தெரிந்தது. லாப்டாப் பேக்கை எடுத்துக்கொண்டு, எழுந்து உடையைச் சரி செய்துகொண்டு தயாரானேன். அவர்கள் ஒருவரோடு ஒருவர் விளையாடியபடியே எனக்குப் பின்புறமாக வரிசையில் நின்றார்கள்.

கூட்டமே இல்லை. முன்புறம் இருந்த ஊனமுற்றோர் இருக்கையில் அமர்ந்துகொண்டேன். முன்கை முழுக்க வெவ்வேறு வண்ணங்களில் பச்சை குத்தப்பட்ட நெட்டையான ஒருவன் அருகே இருந்த இருக்கையில் அமர்ந்துகொள்ள, டிரைவரை குசலம் விசாரித்துவிட்டு மற்றவர்கள் பின்புறம் ஏறிச் சென்றார்கள்.

கிளம்புவதற்குப் பதிலாக பெருமூச்சு ஒன்றை உதிர்த்தபடி பஸ்ஸின் முன்புறம் கீழிறங்கியது. சக்கர நாற்காலி ஏறுவதற்காக உயரத்தைக் குறைத்து, பஸ்ஸுக்கும் நடைபாதைக்கு இடையேயான இடைவெளியை மறைக்க பலகையை விரித்தார் டிரைவர்.



“தேங்க்ஸ்” என்றபடி குள்ளமான, குண்டான பெண் உருவம் ஒன்று தள்ளுவண்டி ஒன்றில் தன தேகத்தைச் சாய்த்தபடியே ஊர்ந்து வந்தது.

“என்ன வெயில், கனடாவுல இவ்வளவு வெயில்னா நம்பப முடியுதா? தேங்க்ஸ் பாப்” என்று சொல்லிவிட்டு, “சாரி மத்தவங்களையெல்லாம் காக்க வச்சுட்டேன்” என்று உரக்க கத்தியபடியே என்னை நோக்கி வந்தார்.

அடுத்த இருக்கையில் அமர்ந்த நெட்டையன் எழுந்து பின்னே செல்ல, நான் அந்த இருக்கைக்கு நகர்ந்துகொண்டேன். மடங்கிய இருக்கையை நேராக்குவதற்கு அவருக்கு உதவினேன்.

“ரொம்ப நன்றி, ரொம்ப நன்றி” என்று எச்சில் தெறிக்க நன்றி சொன்னார்.

சமாளித்து சிறிய இருக்கைக்குள் தன்னைப் பொருத்திக்கொண்டு புன்னகைத்தபடியே மீண்டும் நன்றி சொன்னார். உதட்டில் இருந்தும் எச்சில் வழிந்து கொண்டிருந்தது.

அந்தப் புன்னகை அவ்வளவு ரசமிக்கதாக இல்லை. வேடிக்கை பார்ப்பதுபோல முகத்தைத் திருப்பிக்கொண்டேன்.

கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக்கொண்டு, கண்ணாடியைச் சரி செய்தபடி, அவர் என்னையே கவனித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. ஒருவேளை என் காலருகில் இருந்த பை அவருக்கு இடைஞ்சலாக இருக்கிறதோ என்று எடுத்து மடியில் வைத்துக்கொண்டேன். புன்னகைத்தபடியே மீண்டும் ஒரு “தேங்க்ஸ்” சொன்னார். சோடாப்புட்டி கண்ணாடிக்குப் பின் இருந்த கண்களில் கனிவு இருந்தது.

“லேப்டாப் பேகா?”

ஆமென்று தலையாட்டினேன்.

“ஜாலி தானே? வீட்டுல இருந்தே வேலை செய்யலாம். இந்த மாதிரி வெயில்ல அலைய வேண்டாம்.”

என்ன சொல்வதென்று தெரியாமல் மையமாக தலையசைத்தேன்.

“இந்தியாவுல பிறந்ததுமே கம்பியூட்டர் சொல்லிக் கொடுத்திருவாங்களா?”

“அப்படியெல்லாம் இல்லை” என்று இழுத்தேன். அலுவலகத்துக்குள் பேசும் ஆங்கிலத்தைச் சமாளித்துவிடலாம், இது போல பொது இடத்தில் யாராவது பேச்சுக் கொடுத்தால் காது அடைக்கும், வாய்



குழறும். அதிலும் ஹாக்கி, புட்பால், பேஸ்பால் என்று ஆரம்பித்துவிட்டால் அவ்வளவுதான்.

“இதுவரைக்கும் நான் பார்த்த இந்தியங்க நிறைய பேர் லாப்டாப் பேக்கோடுதான் இருக்காங்க. ஒருவேளை அதுதான் அவங்களுக்கு பாஸ்போர்ட்டோன்னு நினைச்சுக்குவேன். ஏதாவது கேட்டா புரோகிராம் எழுதி காமிச்சிருவீங்களோ?”

“சில சமயம் இங்கிலீஷிலே பேசறதைவிட அது ஈஸி.”

“அதான் இவ்வளவு தூரம் தள்ளி இங்க வந்து வாழறீங்க. இங்கேயே பொறந்து அம்பது வருஷமா நான் இங்கயே இருக்கேன்.”

பேருந்து மெதுவாக ஊர்ந்து கொண்டிருந்தது. ஆளில்லாத நிறுத்தங்களிலும் சில நிமிடங்கள் நிறுத்தி யாரும் ஓடி வருகிறார்களா என்று பார்த்தபடியே சென்று கொண்டிருந்தது.

“இந்தியாவுல இதைவிட சூடா இருக்குமா?”

“சாரி.”

“இந்தியா இதைவிட சூடாத்தானே இருக்கும்? எங்கப்பா எப்படி சமாளிச்சிருப்பாரோ?”

“...”

“உனக்கு ரமண மகரிஷியை தெரியுமா?”

“தெரியும். படிச்சிருக்கேன்”

“நைஸ். அவரைக்கேள்விப்பட்ட இந்தியங்க நிறைய பேர் அவரைப் படிச்சதில்லன்னு சொல்லுவாங்க. பரவாயில்லையே.”

“...”

“அவர்கிட்ட போய் இருக்கணும்னு எங்கப்பா ஆசைப்பட்டார்.”

“...”

“எங்க அப்பா, அம்மா ரெண்டு பேருமே ஹிப்பிங்க. காசு சேர்த்து இந்தியா போய், அங்கேயே செட்டில் ஆகணும்னு நினைச்சாங்க. ஆனா எதிர்பாராத விதமா நான் பொறந்துட்டேன். என்னை பாத்ததும் அம்மா என்னை விட்டுவிட்டு இந்தியா போய்ட்டாங்க.”

“...”

“பதினைஞ்சு வருஷம் கழிச்சு வந்தாங்க. அப்பா போட்டோல காமிச்ச மாதிரியே இல்லை அவங்க. என்னை விட்டுட்டு வா, தனியா போயிறலாம்னு அவரை கூப்பிட்டாங்க. அவரு கடைசி வரைக்கும், இந்தியாவுக்கும் போகலை, என்னை விட்டும் போகலை.”

“...”

“இந்தியாவைப் பத்தி அவர் வாங்கி வச்சிருந்த புத்தகங்க எல்லாத்தையும் படிச்சுருக்கேன். அப்படித்தான் ராமரைத் தெரிஞ்சுக்கிட்டேன். இந்தியா போகணும்னு அப்பப்போ தோணும். இது வரைக்கும் ஒன்டோரியோவை விட்டே போனதில்லை. அப்புறம் எங்க இந்தியா?”

“...”

“சாரி, ரொம்ப பேசறனா?”

“இல்லை. அதெல்லாம் ஒண்ணும் இல்லை.”

மடியில் இருந்த லாப்டாப் பேக்கைத் தொட்டு, “இந்தியங்க எல்லாருமே நல்லவங்க” என்று அழகாகப் புன்னகைத்தார். “நான் தொந்தரவா இருந்தாலும் இல்லைன்னுதான் சொல்லுவீங்க.”

“ரொம்ப நாளைக்குப் பிறகு, ரமணர் பிறந்த ஊருல இருந்து வந்த இந்த அழகான புத்திசாலித்தனமான இளைஞனைப் பார்த்த சந்தோஷத்துல பொங்கிவிட்டேன். இறங்க வேண்டிய இடம் வந்திருச்சு. இல்லாட்டி என் கதையைக் கேட்டு உன்னோட அரை நாள் வீணாப் போயிருக்கும்.” சிரித்துக்கொண்டே எழத் தயாரானார்.

“ஆமா, உன் பேரென்ன?”

சொன்னதும் இரு முறை மனதுக்குள் சொல்லிப் பார்த்துக்கொண்டார். “நல்ல பேர், நான் இறங்கணும். இன்னொரு நாள் வாய்ப்பு இருந்தா பார்க்கலாம் மோகன்.”

பெருமூச்சை எழுப்பியபடி பஸ் மீண்டும் தளர்ந்தது. அவர் முதுகு மறையும் நேரத்தில்தான் நினைவு வந்தது.

“சாரி, உங்க பேரைக் கேட்க மறந்துட்டேன்.”

“தேவதை.”

“...”

“அப்படித்தான் எங்க அப்பா கூப்பிடுவார்.”

மோகன் சுப்ரமணியன்
<mohan.subramanyan@gmail.com>

# கி. சரஸ்வதி கவிதைகள்

**ஓவியம்: எ:ப்.என். சூசா**

## 1. பரவாயில்லை

துல்லியங்களில் என்ன இருக்கிறது?

சிறப்பான ஒரு வட்டத்தைவிட
நெளிகோடுகள் கவனிக்க
வைக்கின்றன

கச்சிதமான கோலத்தின்
அருகில் சிந்தியிருக்கும்
துளி கோலப்பொடி பேரழகு

சற்றுச் சாய்வாக வைக்கப்படும்
நெற்றித் திலகம்... ஆஹா

மேகம் மூடிய நிலாவைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம்

உபயோகமின்றி அடுக்கப்பட்ட பாத்திரங்களை விட
உழைத்த களைப்பில் தொட்டிக்குள் கிடப்பன
பரவாயில்லை

எல்லாவற்றிலும் பிழை அழகுதானே

திருத்திக்கொள்ளும் முன்பாக
ரசித்தும் கொள்ளலாம்

## 2. உன்னுடன்

உன் காதல் கொண்டு
என் நாட்களைச் செய்துகொண்டேன்

அதிகாலைக்கு வாய்க்கிறது
உன் நெற்றி முத்தத்தின்
வாசனை

மதியப் பொழுதில் வியர்வைச்
சில்லிடலில் உன் தொடுகை

சோர்வுறும் மாலையில்
உன் மூச்சின்
ஆறுதல் காற்று

இரவில் கனவில் இருவரின்
பேச்சு நீள்கிறது விடியல் வரை

நொடிப்பொழுதும்
நீங்காதிருக்கவே
தூர தேசமானோம்
நாம்

## 3. ஆடித் தேங்காய்

கூரிய அழிஞ்சியின் நுனியில்
குத்திச் சுட்டெடுக்கிறேன்
நினைவுகளை

இனிப்பு நாட்களை உடைத்துத்
திறந்து அசைபோடுகிறேன்

சுவைமிகுந்து வழிந்த வெல்லப் பேச்சுகள் எண்ணங்களில்
இனிப்பூறச் செய்கின்றன



கண்கள் மூடி உண்டு ரசித்த
பின் பார்வை பெறும்போது
காணக் கிடைக்கிறது

ஆடிப் பிரிவென உடைக்கப்பட்ட
வெற்றுத் தேங்காய் ஓடுகள்




## 4. உன்னால்

பிரிவின் வலி இழைகள் கொண்டு நெய்யப்பட்டது இந்த மௌனப் போர்வை

மனதின் இரைச்சலை வடிகட்டி
எனைத் தூங்கச் செய்வதில்
ஓரளவு வெற்றி இதற்கு

அவ்வப்போது கனவுகளில்
நீ தோன்றாது இருந்துவிட்டால்

விடியலில் அழுது வீங்கிய விழிகள் இன்றித் தொடங்கும் என் நன்னாள்

## 5. முன்னத்தி ஏர்கள்

காது வளர்த்த அம்மாயி
சொல்லும் ஊர்க் கதைகளிடம்
தம்மை ஒப்படைத்துவிட்டு
அமைதியாகிவிடுகின்றன
உலக இலக்கியங்கள்

தாத்தா அவர் காலத்துக் காதலைப்
பேசத் தொடங்கியதும்
மோன நிலைக்குச் சென்றுவிடுகிறார்கள் லவ் டுடே இளைஞர்கள்

தாலாட்டுப் பாடும் தாய்க்கிழவி
தற்போது யூ ட்யூபில் வெகு பிரபலம்

மண்சட்டி சமையல் பார்த்து
நாவில் நீர் சொரிகிறதாம்
மேலை நாட்டிற்கு

கீ பேட் ஃபோன் வாங்கித் தந்தால்
முறைத்து விட்டு
ஸ்மார்ட் ஃபோனைக் காட்டுகிறாள்
பாட்டி

டபடப புல்லட்டில் கலர் ரிப்பன்கள்
ஹாண்டில் பாரில் பறக்க
ஊரைச் சுற்றுகிறார் பெரிய தாத்தா

எப்போதும்
பின் தங்குவதில்லை
முன்னத்தி ஏர்கள்

## 6. அந்த ஒன்று

பிறந்தநாளுக்குக்குவியும்நூற்றுக்கணக்கானவாழ்த்துகளில் உன்னைத்
தேடிச் சோர்வடைகிறேன்

பதிவுக்கான விருப்பக் குறியீட்டிலாவது நீயிருப்பாயா
என அலைபாய்கிறேன்

அதுவும் போகட்டும்
எங்கேனும் உன் பதிவாவது
தோன்றக் கூடுமா எனில்
எங்கும் இல்லை

அழிக்க முயன்ற நட்பு
அழிந்த தடத்தைக் காட்டியபடியே
தான் தொடர்கிறது

தொன்னூற்று ஒன்பது பொற்காசுகள் நிறைந்ததாகத்
தளும்பியபடி
காத்திருக்கிறது குறை குடக்
காதல்

## 7. கடல் கடத்தல்

அடுக்களைச் சிறை

கறிக் குழம்பில் மூழ்கிக்
கிடக்கும் ஞாயிறு

விழாக்காலச் சுமைகள்

மலைபோன்ற துணிக் குவியல்

என எது குறித்தும் வருத்தமற்றவள் அம்மா

பெரும்பான்மைக் கவிதைகளின்
பாட்டுடைத் தலைவி

பாடுபொருளாதல் குறித்த
சிந்தனையும் அவளுக்கில்லை

குடும்பத் தேரைப் புகார்களற்றுப்
புன்னகையுடன் கடக்கும்
அவளை உற்று நோக்கும்போது
புரிபடலாம்

இளமையில் இரண்டொரு முறை
அப்பாவுடன் பார்த்த திரைப்படத்தின் பாடல்களை
முணுமுணுத்தபடி
அவள் பொழுதுகளை
எளிதில் கடக்கும் யுக்தி

## 8. காதல் சிலுவை

நம்மைச் சுமக்கவியலாத காதல்
தன்னைப் பலியிடச் சொல்லிக்
கெஞ்சியபடி மண்டியிட்டுப்
பின்தொடர்ந்தது
அதனால் பலியிட்டேன்
நான் இன்னொரு சிலுவை
எனில்
நான் புனிதக் குறியீடு என்றுணர்

## 9. நாடோடி

நட்சத்திரங்கள் சரியாக இருக்கின்றனவா என
எண்ணிக் கொண்டிருக்கிறேன்
சற்றுப் பொறு
பகல் பெட்டியில் இட்டுப்
பூட்டி விட்டு வருகிறேன்
நாளை வேறு ஊருக்கு
அவற்றை எடுத்துச் செல்ல
வேண்டும்

## 10.

பம்பரத்தின் கடைசிச் சுற்றுக்கு
முன் அதை வாரி எடுத்து
உள்ளங்கையில் சூட்டிக் கொள்கிறேன்
இத்தனை வாழ்ந்த பிறகும்
எதற்கு அதைத் தலை தாழ்ந்து
கிடக்கவிடுவது?

## 11.

சுவர் முழுதும்
பரவியிருந்தன வேர்கள்

மரத்தின் நினைப்பு
சுவரைக் காத்தல்

சுவரின் நினைவில்
வேர் ஒரு கொலைக் கருவி

## 12.

எப்போது வேண்டுமானாலும்
கிளம்பிக் கொள்ள முடிந்த
தயார் நிலை அன்பாகத்தான்
வைத்திருந்தோம் நம் உறவை
இனித்துக் கிடந்த தேநீருக்குள்
அது விழுந்த பிறகு
கோப்பைக்குள் உலகம் செய்து
வளர்கிறது காதல்

**கி.சரஸ்வதி** <ameech2004@gmail.com>

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

1995

**சீமஸ்ஹீனி** | Seamus Heaney

# கவிதை என்னும் மேன்மை

## தமிழில் : ஸிந்துஜா

*(சென்ற இதழ்த் தொடர்ச்சி)*

படைப்பாளிகளாகவும் வாசகர்களாகவும் பாவிகளாகவும் குடிமக்களாகவும் நம்முடைய யதார்த்தமும் அழகியல் ரசிப்பும் எதையும் எதிர்மறையாகக் காண வைக்கின்றன. நம்மைத் தாக்கிச் செயலற்றவர்களாக ஆக்கும் முயற்சிகளை நாம் தகர்த்து எறிய வேண்டியது அவசியம்.

பால் செலனின் கவிதையில் முறுக்கப்படும் உணர்வுகள் நமக்கு அச்சத்தையும் மரியாதையையும் எழுப்புகின்றன; சாமுவல் பெக்கெட்டின் தவிப்பு நிறைந்த குரலும். கலை என்பது உரத்த குரலை எழுப்பும் வல்லமை வாய்ந்தது என்பதை, செலனின் கவிதை இனப்படுகொலையிலிருந்து தப்பித்து உயிருடன் வந்த மனிதனையும், பிரெஞ்சுப் புரட்சியில் பங்குகொண்ட பெக்கெட்டின் அமைதியையும் சுட்டிக் காட்டுகிறது. இச்சூழலைப் பற்றிய சமாதானம் நமக்குள் சந்தேகம்ஏற்படுத்துவதை,கடந்தஇருபதாம் நூற்றாண்டின் முடிவில் நாம் கண்ட நம் நாகரீகத்துக்குஏற்பட்டசோதனைகளுடன் ஒப்பிட வேண்டியது அவசியமாகிறது. நாகரிகம் பற்றிய தரவுகள் ரத்தத்தினாலும் கண்ணீராலும் உருவாக்கப்பட்டவை



என்பது முட்டாள்கள் நம்புவதற்கு சாத்தியம் உள்ளனவே தவிர உண்மையுடன் அல்ல. அல்ஸ்டரிலும் இஸ்ரேலிலும் பாஸ்னியாவிலும் ரூவாண்டாவிலும் மற்றும் காயமுற்றுச் சீரழிந்த பல்வேறு உலகப் பகுதிகளிலும் நடந்தவை ஆளுமைகளின் முன்கூட்டிய தீர்மானங்களுடன் ஒத்துப் போனது. மனித குலத்தின் மிக வலிமையான இயல்புடனோ கலையின் உயர்தன்மையுடனோ ஒத்துப் போகவில்லை. அதனால்தான் நான் பல வருடங்கள், ஒரு துறவி சம்மணமிட்டு உலகத்தின் கடுமையான தாத்பர்யங்களை அறிய முயன்று, ஆனால், அதில் வெற்றி பெறாமலும் உய்வு அடையாமலும் இருந்த போதிலும் தனது முயற்சிகளைக் கைவிடாமல் திரும்பத் திரும்ப அதில் ஆழ்ந்ததைப் போல, நான் என் மேஜைக்கு முன்னால் தலையைக் குனிந்தபடி இருந்தேன்.

வெளிப்பூச்சின் மயக்கத்தில் யாரும் உள்ளொளியைக் காண்பதில்லை. நம்பிக்கைகொள்ளாமலும்நற்செயல்களைத் தவிர்த்தும் வைரத்தின் ஒளியைக் காணக் கண் கூசி நின்றும் சாதிப்பது ஒன்றும் இல்லை. என் அடிப்படைகளைச் சார்ந்திராது அவற்றுக்கு அப்பால் நான் கண்ட உலகம் என்னை நிமிர்த்தியது. சில

வருடங்களுக்கு முன்னர் நான் என்னைப் பற்றிய கணிப்பை ஆராயத்தொடங்கினேன். என் மாறுதலின் முக்கியத்துவத்தை அயர்லாந்துக்கு வெளியே நின்ற ஒரு கதையின் மூலம் சொல்கிறேன்.

பொறுமையின் எல்லைக்குச் சாட்சியாக நின்ற ஒரு துறவியைப் பற்றிய கதை. நாங்கள் வசித்த விக்லோ மாவட்டத்தின் அருகில் இருந்த க்ளெண்டாலோவில், புனித கெவின், அவருடைய கைகளை உயர்த்தி ஒரு சிலுவை வடிவில் நிறுத்தி மண்டியிட்டுத் தன் பிரார்த்தனையை ஆரம்பித்தார். அவ்வழியே வந்த ஒரு கருங்குறுவை, அவரது நீண்டு நின்ற கையை ஒரு மரக்கிளை என்று நினைத்து உட்கார்ந்து, சில முட்டைகளை இட்டது. அங்கேயே ஒரு கூட்டையும் கட்டியது. உலகின் எல்லா ஜீவராசிகள் மீதும் கருணை காட்டும் மனப்பான்மை கொண்ட துறவி, தன் கையை அசைக்காமல் மணிக்கணக்கில், பின்னர் நாள் கணக்கில் அமர்ந்திருந்தார். முட்டைகளிலிருந்து குஞ்சுகள் பொறிக்கப்பட்டு அவை சிறகுகள் முளைத்து வளர்ந்தன. வாழ்வின் சத்தியத்துக்கு உட்பட்டு, பொதுப்புத்திக்கு எதிராக நின்று, லட்சியத்துக்கும் யதார்த்தத்துக்கும் நடுவே ஓர் அடையாளமாக விளங்கிய கைகாட்டியாக நினைவில் இருக்கும் வல்லமை பெற்ற கதை.

நான் முன்பே கூறியபடி புனித கெவினின் கதை அயர்லாந்துக்கு வெளியே நடந்தது. ஆனால், இது இந்தியாவிலோ ஆப்பிரிக்காவிலோ ஆர்க்டிக்கிலோ அமெரிக்காவிலோ கூட நிகழ்ந்திருக்க வாய்ப்புண்டு. ஒரு நாடோடிக் கதை மரபில் வந்ததிது என்று சொல்ல நான் வரவில்லை. இதன் கலாச்சார மதிப்பீடையோ அல்லது பலவேறு நாகரிங்கங்களின் சேர்க்கையைப் பிரதிபலிக்க வல்லது என்பதையோ நான் மறுக்கவில்லை. மாறாக, அதன் நம்பகத்தன்மையையும் தொலைத்தூரப் பார்வையிலும் அவரவர் இடங்களில் மதிப்பைப் பெறும் வல்லமை உடையதையும் நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இது காலனியக் கருத்தோட்டத்துக்கு இசைவானது என்று ஒருவர் கூற முன்வரலாம் என்று என்னால் கற்பனை செய்ய முடிகின்றது. தீங்கற்ற ஏகாதிபத்தியவாதி அல்லது ஏகாதிபத்தியத்தின் மதப் பிரசாரகர் என்று அவரது பரந்துபட்ட வாழ்வின் பரிமாணக் கருத்துக்களை ஒருவர் தன் கருத்துக்கு ஏற்றவாறு திரித்துக்கொள்ள முடியும். இத்தகையவர்தான் ஐரிஷ் மரபின் பூரண அழகை இந்தக் கதையின் மூலம் நிறுவ முயன்றிருக்கிறார் என்று என்னால் கூற முடியும்.

கிரால்டர் கெம்பன்சிஸின் எழுத்துக்களில் கெவினின் கதையை ஒருவர் காண முடியும். கெம்பன்சிஸ் பனிரெண்டாம் நூற்றாண்டில் அயர்லாந்தைக் கைப்பற்றிய நார்மன்களில் ஒருவர். ஐந்நூறு வருடங்கள் கழித்து ஜியாஃப்ரே கீட்டிங் என்னும் ஐரிஷ் மொழி ஆராய்ச்சியாளர், ‘அயர்லாந்து பற்றிய பொய்ச் சரித்திரத்தை எழுதிய மந்தையைச் சார்ந்த காளை’ என்று கெம்பன்ஸிசைச் சாடுகிறார். புராண காலத்து கிறிஸ்துவ நாகரிகம் என்பது சுரண்டல் அல்லது காட்டுமிராண்டித்தனத்தால் உருவானது என்று அவ்வளவு எளிதாக என்னால் கடந்து விட முடியாது.

இந்த வருட நோபல் பரிசு பற்றிய செய்தி வெளியாவதற்கு முன் தினம் ஸ்பார்ட்டாவில் ஒரு சிறிய மியூசியத்தில் நான் பார்த்தது இந்தக் கருத்துக்குச் சான்றாக நின்றது. புனித கெவினின் நம்பிக்கைக்கு நேர் எதிரான கோட்பாட்டு வழிமுறையைச் சார்ந்திருந்த ஒன்றாக அச்சிற்பம் காணப்பட்டது. ஆனால், அதிலும் மரக்கிளைப் பறவையும் மயங்கிக் கிடந்த ஒரு விலங்கும் பரவசத்துடன் காணப்பட்ட ஒரு மனிதனும் வடிக்கப்பட்டிருந்தார்கள். மனிதனாகக் காண்பிக்கப்பட்டது ஆர்ஃபியஸ். பரவசத்துக்குக் காரணம் வழிபாட்டினால் அல்ல; இசையால். அச் சிற்பத்தை நான் வரைய முயன்றேன். அதைப் பற்றிய விவரங்களைக் கொடுத்த அட்டையில் இருந்ததைத்தான் நான் பிரதியெடுக்க முடிந்தது. என்னை அந்த உருவம் முழுமையாக ஆட்கொண்டது அதன் புராதனத்தாலும் நம்பகத்தன்மையாலும். அட்டையும் என் மதிப்பைப் பெற்றதற்கு காரணம் நான் முப்பது ஆண்டுகளாகத் தேடிய விவரங்களைப் பெயருடன் அது கொடுத்தது என்பதால்தான்: ‘சமர்ப்பிக்கப்பட்ட சிற்பம்’ என்று உரைத்த அந்த அட்டையில் ‘ஹெல்லினிஸ்டிக் கால, ஓர் உள்ளூர்க் கவியால் நிறுவப்பட்ட ஆர்ஃபியஸ்’ என்று தகவல் தரப்பட்டிருந்தது.

மறுபடியும் நான் ஏதோ உணர்ச்சிவசப்பட்டோ வெறி கொண்டோ பேசுவதாக நினைக்க வேண்டாம். மாறாக நான் இங்கு தரும் படிமங்களும் கதைகளும் மதிப்பை உருவாக்குபவை என்றுதான் நான் கருதுகிறேன். இந்த நூற்றாண்டு, ஆயுதங்கள் மூலம் நாஸியினர் அடைந்த தோல்வியைக் கண்டது. திணிக்கப்பட்ட கொள்கைகளையும் கலாச்சார மதிப்புகளையும் எதிர்த்தெழுந்த கதைகளின் அடியில் சோவியத் ரஷ்யாவின் வீழ்ச்சியைக் காண்கிறோம். ஒரு தேசத்தின் கலாச்சார நடைமுறைகள், கொள்கைகள் ஆகியவற்றைச் சற்று நிதானமாகத் தீர்மானிக்கும் கட்டத்தில் அந்த தேசம் சார்ந்த நெறிமுறைகளையும் அதன் தனித்துவத்தையும் கவனத்தில் கொள்ள வேண்டியிருக்கிறது. இனக்குழு, மதம் இரண்டும் சார்ந்த மரபு கூடத் தலைக்கனத்தினால் பாசிசத்தின் காலடியில் விழுந்த உதாரணங்கள் நம்மிடம் உள்ளன. அவற்றின் மீதான நம் கண்காணிப்பு நாட்டின் மீதான அன்பையும் நம்பிக்கையையும் தகர்த்து விடலாகாது. மாறாக எந்தவொரு மரபும் அனைவருக்கும் உகந்த அரசியல் சூழலை உருவாக்க நமது நடமாட்டத்தின் மீதும் சோர்வுறா ஆற்றலின் மீதும் நம்பிக்கை கொள்ள வேண்டும். படுகொலைகளும் பேரழிவுகளும் வேரோடு அழித்தலும் நடந்த போதிலும் பாலஸ்தீனியர்களுக்கும் இஸ்ரேலியர்களுக்கும் இடையே, ஆப்பிரிக்கர்களுக்கிடையே ஏற்பட்ட புதிய உறவும் பெருஞ் சுவர்கள் இடிந்து அழிந்ததும் இரும்புத்



திரைகள் களையப்பட்டு விட்டதும் புதிய உலகம் திறக்கப்பட்ட நம்பிக்கையை நமக்குள் ஏற்படுத்தியது.

அயர்லாந்திலும் இந்த வெளிச்சம் தலை காண்பிக்கும் என்ற நம்பிக்கை மலர ஆரம்பித்துள்ளது. இங்கு பிரச்சினை ஆங்கில அரசுக்கும் அயர்லாந்து அரசுக்குமிடையே உள்ள தீவின் அதிகார எல்லை பற்றியது. அது இருவருக்குமிடையே உள்ள பரம்பரைச் சொத்து பற்றியதும் ஆகும். டென்னிஸ் கோர்ட் நடுவே செல்லும் வலையைப் போல் இரு அரசுகளும் இந்தப் பிரிவினையை கையாள வேண்டும் என்பதே மக்களின் எதிர்பார்ப்பும் நம்பிக்கையும். மோதலுக்கு போட்டிக்கும் பதிலாக, அல்லது 'எதிரி', 'கூட்டணி' போன்ற வார்த்தைகளுக்குப் பதிலாக நல்லிணக்கத்தை எதிரொலிக்கும் அனைவருக்குமான பாஷையை மேற்கொள்ள வேண்டும்.

கவிஞர் டபிள்யூ.பி. யீட்ஸ் எழுபது ஆண்டுகளுக்கு முன்பு இந்த மேடையில் நின்ற போது அயர்லாந்து, உள்நாட்டுக் கலவரங்களின் விளைவாகச் சிதைந்து போய், அதிலிருந்து தன்னை மீட்டுக் கொண்டு ஆங்கிலேயருடன் விடுதலைப் போருக்கான முஸ்தீபுகளைச் செய்துகொண்டிருந்தது. யீட்ஸ் நோபல் பரிசு பெற ஸ்டாக்ஹோமுக்கு வரும் ஏழு மாதங்களுக்கு முன்பே அந்தச் சிறிய போர் முடிவடைந்து விட்டது. ஆனால், அப்போர் ரத்தக்களரியுடன், மிகுந்த துயரங்களை ஏற்படுத்தியதன் விளைவு அடுத்த பல ஆண்டுகளுக்கான அரசியல் பலவந்தங்களை அயர்லாந்தைச் சார்ந்த இருபத்தியாறு சுதந்திர நாடுகளுக்குள் நிர்பந்தப்படுத்தியது. முதலில் ஐரிஷ் தனி நாடு என்றும் பின்னர் அயர்லாந்து குடியரசு எனவும் ஆகியது.

யீட்ஸ் உள்நாட்டுப் போரைப் பற்றியோ விடுதலைப் போராட்டத்தைப் பற்றியோ அவருடைய நோபல் உரையில் குறிப்பாகக் கூட ஒன்றும் சொல்லவில்லை. அரசாங்க நிறுவனங்களின் தோற்றம் பற்றி, அவற்றின் அழிவு பற்றி, கலாச்சார வளர்ச்சி பற்றி, அதன் சீரழிவு பற்றி அவரை விட அதிகம் அறிந்தவர் வேறு யாரும் இல்லை; ஆனால், அவர் தனது உரையில் ஐரிஷ் நாடக இயக்கத்தைப் பற்றிப் பேசினார்.

உள்நாட்டு விடுதலைப் போராட்டங்கள் படைப்பாளிகளை உருவாக்கியது என்றும் தனது மேதைமையையும் தனது நண்பர்களான ஜான் மில்லிங்டன் சிஞ், லேடி ஹஸ்த கிரிகோரி ஆகியோரின் மேதைமைகளையும் அப்போராட்டங்கள் விளைவித்துப் பெருமை தேடிக் கொண்டன என்றும் கூறினார். அயர்லாந்தின் உள்ளூர்க் கவிஞர்களும் நாடகக்காரர்களுமே அவர் பிறந்த நாட்டின் பரிணாம வளர்ச்சியைச் சாதித்தார்கள் என்று அவர் ஸ்வீடனுக்கு வந்து உலகுக்கு உரைத்தார். நோபல் உரையில் அவர் வசனமாகச் செய்துகொண்ட தற்புகழ்ச்சிதான் பத்தாண்டுக்காலம் கழித்து 'நகரக் கண்காட்சியகத்துக்கு மீண்டும் வருகை' என்னும் கவிதையாகப் பிறப்பெடுத்தது. அதில் யீட்ஸ் சமீபத்திய



சரித்திரத்தில் தியாகம் புரிந்த வீரர்களை பற்றிய ஓவியங்களுடன் தன்னைப் பொருத்திக்கொண்டு, திடீரென்று ஏதோ ஒரு சகாப்தம் நிகழ்ந்து விட்டதை அறிந்துகொண்டவராய்எழுதுகிறார்:'என்இளமையில் இருந்த காலாவதியான அயர்லாந்து இல்லை இப்போது. கவிஞர்கள் கண்டெடுத்த அற்புதமான மகிழ்ச்சி நிரம்பிய அயர்லாந்து'. அவரது முழு படைப்பிலும் அதிகமாக மேற்கோள் காட்டப்பட்ட இரண்டு வரிகளுடன் கவிதை முடிகிறது. 'எங்கு மனிதனின் புகழ் ஆரம்பித்து முடிகிறது என்று யோசி / எனது புகழ் என் நண்பர்களால் என்று சொல்' - இவ்வரிகளின் அகண்ட, புல்லரிப்பை ஏற்படுத்துகின்ற அனுபவம் ஒரு கவிதை தன்னை நிறுவுவதை விட தன் வீரியத்தின் பாய்ச்சலைக் காண்பிக்க விழைவதாக நான் கருதுகிறேன். அவை ஒரு கவிஞனின் வெற்றிப் பாதையின் அடிச்சுவடாக விளங்கு கின்றன. சொல்லப்போனால் நான் இங்கு கூற விழைவதுடன் அவை ஒத்துப் போகின்றன.

இந்தக் கவிதையில் நான் மேற்கோள் காட்ட விரும்பும்வேறு சில சொற்கள்:'என்னை விமரிசிக்கும் நீங்கள் இந்தப் புத்தகம், அந்தப் புத்தகம் என்று தனித்து விமரிசிக்காதீர்கள்.' பதிலாக யீட்ஸ் அவரது அவையினரிடம் கேட்டதையே நானும் உங்களிடம்கேட்கிறேன். கடந்த நாற்பது வருஷங்களில் ஐரிஷ் கவிகளும் நாடக ஆசிரியர்களும் செய்த சாதனைகள் பற்றி யோசித்துப் பாருங்கள்; அவர்கள் எல்லோருமே என் சிறந்த நண்பர்கள். இலக்கிய விஷயங்களில் எஸ்ரா பவுண்ட் "சிறந்த படைப்புகளை உருவாக்காதவர்களின் அபிப்பிராயங்களை யாரும் ஏற்கக் கூடாது' என்றார். இந்த அறிவுரையை நான் மிகவும் மதித்துப் போற்றிப் பின்பற்றுகிறேன். என் நாட்டினரின் பார்வைகள் மட்டுமில்லாது உலகெங்கும் கவனிக்கத்தக்க படைப்பாளிகளைப் பின்பற்ற வேண்டும் என்னும் குறிக்கோளுடன்தான் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு நான் பெல்ஃபாஸ்டில் எழுதத் தொடங்கினேன். இன்று நான் வாழும் அயர்லாந்து இந்த சமகாலத்தவர்கள் ஏற்படுத்தித் தந்த கற்பனைகளுக்கான களன்.

எனினும் யீட்ஸ் உயர்ந்தோங்கிய கவிஞர். இந்த நூற்றாண்டின் கவிதைகளில் அவருடைய '1949', 'உள்நாட்டுப் போரின் போது தியானங்கள்' என்னும் இரண்டு சிறப்பான கவிதைகள் எப்போதும் இடம் பெற்றிருப்பவை. இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ள கவிதை அவருடைய வீட்டு ஜன்னலில் இருந்த பறவைக் கூடு பற்றிய பிரசித்தமான வரிகளை அடக்கியது. அப் பறவை சுவரில் விழுந்த பிளவின் நடுவில் கட்டிய கூடு அது. கவிஞர் அப்போது ராணுவப் பகுதியைச் சார்ந்த நார்மன் டவரில் குடியிருந்தார். வலிமை மிக்க, வன்முறையை ஏற்றிருந்த வெற்றியாளர்கள் மூலம் கலைஞர்களும் கட்டமைப்பாளர்களும் கலாச்சாரத்துடன் இணைந்த கூத்தை அவர் கண்டார். அப்போது அவருக்கு அந்தப் பறவை தன் குஞ்சுக்கு உணவிடுவது தேனீயின் வடிவத்தை ஒத்திருந்தது போலத் தோன்றிற்று. அத்தகைய



*படிமம் கவிதைகளிலே ஆழப் பதிந்திருக்கும் ஒன்று. கடுமையாக உழைத்தல், இணக்கமாக இருத்தல் ஆகிய குணங்களின் மூலம் பொதுநலத்தைப் பேணிக்காக்கும் தன்மையைப் பிரதிபலிக்கும் படிமம்:*

பலமற்ற கட்டிடத்தின் சுவர்ப் பிளவில்
தேனீக்கள் கட்டுகின்றன.
தாய்ப் பறவைகள் புழுக்களையும் ஈக்களையும்
கொண்டு வருகின்றன.
என் சுவர் பலமிழந்து வருகிறது;
தேனீக்களே, காலியான பறவையின்
வீட்டுக்கு வந்து கட்டுங்கள்.

நாங்கள் சிறைப்பட்டு இருக்கிறோம்.
எங்கள் ஊசலாட்டத்தால் சாவி பூட்டி வைத்திருக்கிறது.
எங்கோ
ஒரு மனிதன் கொல்லப்படுகிறான்.
அல்லது ஒரு வீடு தீக்கிரையாகிறது.
தெளிவாக உண்மை
கண்டறியப்படவில்லை.
பறவையின் காலி வீட்டில் வந்து
நீங்கள் கட்டுங்கள்
கல்லாலோ மரத்தாலோ ஒரு
தடுப்பு எழுப்பப்பட்டிருக்கிறது.
பதினான்கு நாள்களாக உள்நாட்டுப் போர்.
ரத்தக்கறையுடன் துரத்தப்பட்டு
அந்த இறந்த இளைஞன் சாலையில் கிடந்தான்.
காலியான வீட்டில் வந்து கட்டுங்கள்.

எங்கள் மனதிற்குக் கற்பனைகளை
உண்ணக் கொடுக்கிறோம்.
இதயம் கொழுத்து விடுகிறது.
நேசத்தைக் காட்டிலும்
பகைமை முன்வருகிறது.
ஓ, தேனீக்களே.
காலியாக இருக்கும் இடத்தில் வந்து
கட்டுங்கள்

இந்தக் கவிதையை நான் பலமுறை கேட்டிருக்கிறேன். முழுதாகவும் சில பகுதிகளாகவும் கடந்த இருபத்தி ஐந்து வருஷங்கள் அயர்லாந்து குடிமக்கள் கேட்டிருக்கிறார்கள். வியப்பதற்கும் ஒன்றுமில்லை. புனித கெவினைப்போன்று இக்கவிதை மென்மையாக வாழ்க்கையைத் தீண்டுகிறது; அதே போல் கல்மனத்துடனும். ஹோமரின் வாழ்க்கையைப் போல... மறுபடியும் சாலை ஓரங்களில் படுகொலைகள் நடக்கும் என அதற்குத் தெரியும். மினி பஸ்ஸில் உள்ள தொழிலாளிகள் நிற்க வைத்து சுடப்படுவார்கள் என்றும்; ஆனாலும் கைக்குலுக்களைப் போல, மனிதர்களுக்கிடையே நேயத்தையும் பாதுகாப்பையும் தரும் பெருமையையும் உடையதாய் இருக்கிறது. பிரக்ஞையில் தங்கியிருக்கும் இக்கட்டான நிலைமைகளின் முரண்பாடுகளையும் அதுநேர்கொள்கிறது. கடுமையும், பழிவாங்குதலுமான உணர்ச்சி பற்றி ஒரு விதத்தில் உண்மையாக

வெளிப்படுத்தும் அதே சமயம், மனம் இறுக்கம் கொண்டு மகிழ்ச்சியையும் நம்பிக்கையும் இழக்கும் நிலைக்குத் தள்ளிவிடப்படுவதில்லை.

அன்னா அக்மதோவாவிடமிருந்தும், இருநூறு வருஷங்களுக்கு முன்பு சரித்திர நெருக்கடியையும் தனிப்பட்ட வாழ்க்கையின் சிக்கலையும் உரைத்த வில்லியம் வோர்டஸ்வொர்த்திடமிருந்தும் அந்த ருஷ்யப் பெண்மணி கேட்ட முழுமையான கவிதைக்கு இது சான்றாக விளங்கும்.

டிமாடகஸ் என்னும் பாணன் டிராய் நகர வீழ்ச்சியும் அதனால் ஏற்பட்ட உயிர்வதைகளையும் பற்றிப் பாடும்போது ஒடிசியஸ் அழுகிறான். அதைப் பற்றி ஹோமர் கூறுகையில் அவன் அழுவது போர்க்களத்தில் கணவனின் வீழ்ச்சியைக் கண்டு மனைவி விடும் கண்ணீரை ஒத்ததாக இருந்ததாம். அவரது மகத்தான இதிகாசத்தில் இடம் பெறும் உவமையணி:

கணவன் திணறி இறந்து கொண்டிருக்கையில்
அவள் அவனைப் பிடிக்கக் கை நீட்டுகிறாள்
அவளுடைய முதுகையும் தோள்களையும் முன் நீட்டி.
அவள் முதுகையும் தோள்களையும் குத்தும் ஈட்டிகளையும் உணருகிறாள்.
அடிமையாகி துக்கத்துடன் ஓடும் அவளது பரிதாபமான கண்ணீரை விட.
ஒடிசியஸ்சின் கண்ணீர் இன்னும் பரிதாபமாக இருக்கிறது.
யாரும் பார்க்க முடியாதபடி மறைக்கப்பட்டு.

மூன்றாயிரம் ஆண்டுகளுக்குப் பின் இன்று நாம் பழைய செய்தி சுருள்களில் பார்த்து, வதை முகாம்களைப் பற்றியும் அடிமை வாழ்க்கை முறை பற்றியும் அறிந்து, அதனால் இன்று நிகழும் காட்டுமிராண்டித்தனமான நடவடிக்கைகளைக் கூட சாதாரணமாக ஏற்றுக்கொண்டு விட்ட மனநிலையை அடைந்து விட்டோம். அரக்கத்தனமாக அந்தப் பெண்மணியின் முதுகிலும் தோள்களிலும் செலுத்தப்பட்ட ஈட்டிகள் காலத்தையும் வார்த்தைகளையும் மீறி நிற்கின்றன. செய்திப்பட நிழலுருவம், தாங்க முடியாதவற்றை நாம் எவ்வாறு எதிர்கொள்கிறோம் என்பதைப் போதுமான அளவு சுட்டிக்காட்டுகிறது.

இந்தப் போதுமான அளவு என்பது கவிதைக்குக் குறிப்பாகப் பொருந்துகிறது. 'செவிக்குள் இருக்கும் கோயில்' என்னும் கவிதை வரியைக் காணுங்கள். மேன்டால்ஸ்டாம் கூறிய 'தெளிவான பேச்சின் சாசுவதத்தை' இது உறுதி செய்கிறது. பாடலாக வெளிப்படும் கவிதையில் அதுவே உண்மைத்தன்மை பொருந்தியதாக விளங்குகிறது. சரசமற்ற இசை எமிலி டிக்கின்சன், பால் செலானில் அழுத்தமாக விழும். இதுவே ஜான் கீட்ஸில் செழுமைப்படுத்தப்படுகிறது. இது கவிஞனை மற்ற எல்லாப் புற ஒலிகளையும் மறுத்துவிட்டு உள் குரலைக் கேட்கும் கட்டாயத்தை ஏற்படுத்துகிறது.

சொல்லப்போனால் நான் அந்த சோஃபாவிலிருந்து இன்னும் இறங்க முயற்சிக்கவில்லை. செய்திகளையும் உலக சரித்திரத்தையும் அவற்றுக்குப் பின்னாலிருக்கும் உலகளாவிய சோகத்தையும் அறிவதில் குறியாயிருக்கிறேன். நான் முயற்சி செய்து அறிவது இன்னும் முடியவில்லை. ஒரு கவிஞனாக என் முயற்சி, ஒலிகளின் ஒழுங்கினை திருப்திகரமாக முடுக்க முயலுவதுதான். அகன்ற அலையானது வேறொரு வடிவெடுக்கும் ஆசையில் முயங்கித் தன் மூலத்தில் கரைய விரும்புவது போல.

நான் இங்கு குறிப்பிட்ட கவிதையில் என் தேடலை முயற்சிக்கிறேன். உதாரணமாக யீட்ஸின் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்ட கவிதை வரி - 'காலியான வீட்டில் வந்து கட்டுங்கள்'. அதில் தொனிக்கும் இறைஞ்சல், இறுக்கமான 'கட்டு', 'வீடு' என்னும் வார்த்தைகள், அவை 'காலி' என்னும் வார்த்தையில் சென்று தஞ்சமடைகின்றன. 'கற்பனைகள்', 'பகைமைகள்', 'தேனீக்கள்' என்னும் மூன்று வார்த்தைகள் ஒழுங்கு நிரம்பிய ராக ஒலியாகக் கவிதையில் வந்து விழுகின்றன. மொழியின் இயல்பான செழிப்பை ஒருவர் இங்கு காண முடியும். கவிதை வடிவம் என்பது கப்பலும் நங்கூரமும் சேர்ந்த ஒன்று. உடனடியாக அது தேர்ந்த மனவெழுச்சியைத் தந்து உடலையும் மனதையும் இணைக்கும் பாலமாக ஆகி விடுகின்றது.

உண்மையான கவிதை என்பது என்ன செய்ய வேண்டுமோ அதை யீட்ஸின் கவிதை செய்கிறது; நம்முடைய பரிவுணர்ச்சியைத் தொட்டு. இரக்கமற்ற உலகு இயற்கையை எவ்வாறு பாதிக்கிறது என்பதையும் கவிதை எவ்விதப் பரிவுணர்ச்சியும் இல்லாது சித்தரிக்கிறது. கவிதையின் வடிவம் கவிதைக்குப் பெருமை தேடித் தர வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறது. நம்மைச் சுற்றியுள்ள தவறுகளைச் சுட்டிக்காட்டி நாம் வேட்டையாடி சேர்க்க வேண்டியது, வாழ்வின் மதிப்புகளை. தனிமையும் துன்பங்களும் மனித வாழ்க்கையில் பிரிக்க முடியாததாக இருந்தாலும்.

"ஸிந்துஜா" <weenvy@gmail.com>

---

சீமஸ் ஜஸ்டின் ஹீனி (1939 - 2013), ஒரு ஐரிஷ் கவிஞர், நாடக ஆசிரியர், மொழிபெயர்ப்பாளர். 1995ஆம் ஆண்டு இலக்கியத்திற்கான நோபல் பரிசு பெற்றார். ஐயர்லாந்து நாட்டின் கலாச்சார அடையாளங்களில் ஒருவரான ஹீனி, ஐயர்லாந்தில் வில்லியம்.பி.யீட்ஸ்க்கு பிறகு தோன்றிய மிக முக்கியமான கவிஞர் என்று விமர்சகர்களால் பாராட்டப்பட்டவர். அமெரிக்க அதிபர் ஜோ பைடனால் அடிக்கடி மேற்கோள் காட்டப்படும் அளவுக்கு சீமஸ் ஹீனியின் பிரபலம் இருக்கிறது. இவரது சிறந்த படைப்புகளில் ஒன்றாக 'ஒரு இயற்கைவாதியின் மரணம்' (1966) குறிப்பிடப்படுகிறது. இவரது சில கவிதைகள் தமிழில் மொழிபெயர்ப்பாகி சிற்றிதழ்களில் வெளிவந்துள்ளன.

# சா. கந்தசாமியின் அழகியல் நோக்கு

ப்ரஸன்னா ராமஸ்வாமி



சா. கந்தசாமியின் ‘சாயாவனம்’ தமிழின் மிகச் சிறந்த, ஏன் உலக மொழிகளில் உள்ள சிறந்த நாவல்களில் ஒன்று. அதே போல ‘தக்கையின் மீது நான்கு கண்கள்’ உலக மொழிகளில் எழுதப்பட்ட மிகச் சிறந்த சிறுகதைகளில் ஒன்று.

தமிழ் நவீன எழுத்துக்காரர்களில், அடர்த்தி கூடியவற்றை மிகச் சுருக்கமான சொற்களில் எழுதியவர்கள் சா. கந்தசாமியும் அசோகமித்திரனும். ஆனால், முற்றிலும் வேறுபட்ட இரண்டு அழகியல் வழிகள். முக்கியமாக சொற்களூடான மவுனம் கால்கொள்ளும் லய வேறுபாட்டில் பொதிந்தவை அந்த அழகியல் வேறுபாடுகள்.



‘ஒரே ஒரு நல்ல கவிதையை எழுதியவரைக்கூட, ஆயிரமாண்டுகள் கடந்தும் கவிஞர் என்று கொண்டாடும் மரபு நம்முடையது’ என்று எங்கள் உரையாடலில் கந்தசாமி அடிக்கடி சொல்வதுண்டு.

வாழ்க்கையின் அம்சங்கள் பற்றிக் கந்தசாமிக்கு மிகக் கூர்மையான அவதானங்கள் உண்டு. அவற்றை நேர்ப்பேச்சிலும் எழுத்திலும் சுருக்கமான வார்த்தைகளில் கச்சிதமாகச் சொல்லிவிடும் ஆற்றலும் அவருக்கு உண்டு.

பண்பாட்டு வெளி சார்ந்த கலைகள், தொல்லியல், முக்கியமாக epigraphy, இவற்றிலெல்லாம் அவருக்கு இருந்த ஆர்வமும் அவை சார்ந்த அறிவைப் பெற்றுக்கொள்வதற்கான அவருடைய வாசிப்பும் அவர் மேற்கொண்ட பயணங்களும் சுவாரசியமானவை. அவற்றை மிகுந்த சுவாரசியத்துடன் உணர்ச்சி மேலிட அவர் பகிர்ந்துகொள்வார்.

1980, 90களில் தமிழ் எழுத்தாளர்களில் பலர் எனக்கு நெருங்கிய நண்பர்கள். அவர்களில் நீண்ட உரையாடல்களோடு

நிறைய நேரம் செலவிட்டவர்கள் சுந்தர ராமசாமி, ந. முத்துசாமி, பிரபஞ்சன், சா. கந்தசாமி. மிக வேறுபட்ட மனப்பாங்கு, அழகியல், உலகங்களின் செறிவான அனுபவப் பகிர்வுகள் அவை. மிகுந்த ரஸமானவை. முக்கியமாக நாங்கள் சந்திப்பதற்கு முன்பிருந்த அவரவருடைய வாழ்க்கையின் சில பகுதிகள் பற்றியும் அவர்கள் அறிந்த மற்ற எழுத்தாளர்கள் பற்றியும் சொன்னவை முக்கியமானவை.

கந்தசாமியைப் பொறுத்தவரை ஒரே நேரத்தில் அண்ணாந்து பார்க்கக்கூடியவராகவும் வியப்பிலாழ்த்தக்கூடியவராகவும் கடுமையான விமர்சனத்துக்குரியவராகவும் இருந்தவர் ஜெயகாந்தன்.

எதனாலும் யாராலும் கலைக்க முடியாத நம்பிக்கையும் மரியாதையும் கநாசு, அசோகமித்திரன் இருவர் பாலும் கந்தசாமிக்கு இருந்தது. அசோகமித்திரனின் எழுத்தை அவர் மிக உயர்வானதாகக் கருதினார்.

கந்தசாமி அசைவம் சாப்பிட மாட்டார். அல்லது ஒரு கட்டத்தில் முழுமையாக விலக்கிவிட்டார். வீட்டில் நிறைய செய்வார்கள். ஆனால், அவருடைய கதைகளில் விதவிதமான அசைவச் சாப்பாடு வரும். ஒருமுறை இந்த முரண் பற்றிக் கேட்டேன்.

“நான் எழுத வந்தபோது பெரும்பாலும் பிராமணர்கள்தான் எழுதிட்ருந்தாங்க. அந்த வாழ்க்கைதான் பதிவாகியிருந்தது. வேற ஒரு வாழ்க்கை இருக்கு, அதைப் பதிவு பண்ணணும்னு நினைச்சேன். சாப்பாடு ஒரு முக்கியமான விஷயமாப் பட்டுது. அதான் அதை சேர்த்துட்டே வருவேன். கதைப் போக்கோடதான்” என்றார்.

பிராமண அழகியல், பிராமணரல்லாத அழகியல் என்ற விஷயம் பற்றிய கூர்மையான பார்வை அவருக்கு இருந்தது. ஆனால், பிராமணர்களின் பால் சிறிதும் வெறுப்பே இல்லாமல் பழகியவர். மற்ற சிலருடைய அபிப்ராயங்களையும் புறக்கணித்துவிட்டு, லட்சுமி கிருஷ்ணமூர்த்தி தானே முன்னெடுத்து சாயாவனத்தைப் பதிப்பித்ததை எப்போதுமே மிக நெகிழ்ச்சியுடன் குறிப்பிடுவார். சொல்லப்போனால் நெகிழ்ச்சி என்ற உணர்ச்சியை அவரிடம் கண்ட ஒரே சந்தர்ப்பம் அதுதான்.

‘டாக்குமெண்டரி சினிமா’ மீது அவருக்குப் பெரிய ஆர்வம் இருந்தது. சில படங்களும் எடுத்தார். அவருக்கு அந்த வடிவம் வசப்படவில்லை என்பது படங்களில் தெரியும். ஆனாலும் அவர் அவற்றில் உள்ளீடாகக் கொண்டுவந்திருக்கும் செய்திகள், அவரது நோக்கு, இவை முக்கியம் என்று எனக்குத் தோன்றியிருக்கிறது. என்ன பிரச்சினையென்றால், அந்தப் படங்களின் தயாரிப்புச் செலவிலும் லவுகீக வாழ்வில் பொருளாதாரம் தொடர்பாக அவர் கடைப்பிடித்த மதிப்பீடுகளைப் பின்பற்றுவார்.

ஏறக்குறைய அவருடைய எல்லா நாவல்களுமே எனக்குப் பிடித்தவைதாம். ‘சாயாவனம்’ கிளாசிக். All time great. திரும்பத் திரும்பப் படித்து வியந்திருக்கிறேன்.

“உங்க நாவல்ல வர்ற ஊரை, உங்க நாவலைப் படிக்கிறதுக்கு முந்தியே பார்த்திருக்கிறேன் தெரியுமா? அப்பா வழியில் எங்க சொந்த ஊர் அது” என்பேன்.

அதிகம் பிடித்த நாவல்கள், ‘தொலைந்து போனவர்கள்’, ‘அவன் ஆனது’, ‘விசாரணைக் கமிஷன்’. அவர் கடைசியில் எழுதிய இரண்டும் என்னோடு நெருங்கி வரவில்லை, தங்கவுமில்லை.

இலக்கியப் பரப்பில் எழுத்து தவிரவும் தன் ஈடுபாட்டையும் இருப்பையும் நிலைகொள்ள அவர் செய்தவை ‘கசடதபற’ தொகுப்பும் கவிதைத் தொகுப்பும். ‘கசடதபற’ தொகுப்பு ஒரு முக்கியமான ஆவணம். சிறப்பான முயற்சி.

மனைவியிடம் நல்ல இணக்கமான உறவு, மரியாதை, அன்புடன் இருந்தவர் கந்தசாமி. ஒரு விதத்தில் கணவன் மனைவி உறவின் நிர்ப்பந்தங்கள், வெளிப்பார்வைக்குச் சத்தம் போட்டு காத்திரமானவனாகக் காட்சி தரும் கணவனின் சாதாரணத்தன்மை; மனைவியின் அழுத்தமான, ஆழமான உறுதியான குணாம்சங்கள்; அந்த உறவின் உணர்வு ரீதியான அலையாடல்களை மிகக் கூர்மையாக, அடங்கிய த்வனியில் தனது நாவல்களில் எழுதியிருப்பார்.

கந்தசாமி அகச் சிக்கல்கள் நிறைந்த ஆண் பாத்திரங்களைப் படைத்தவர். அவருடைய ஆண் பாத்திரங்கள் வெளிப்பார்வைக்கு எந்த ஆரவாரமுமற்ற சாதாரணர்கள்தான். ஆனால், நிதானமான வாசிப்பில், பரிமாணங்களோடு புலப்படுவார்கள். அவற்றை வெளிப்படுத்தும் வாய்ப்பே கிடைக்காதவர்களாகவோ வெளிப்படுத்தினாலும் கவனம் பெறாதவர்களாகவோ வாழ்ந்தவர்களாகவே இருப்பார்கள்.

அவர் எழுத வந்த காலத்தில் அவருடைய எழுத்து, வடிவத்திலும் உள்ளீட்டிலும் மிகப் பெரிய பாய்ச்சல். அது வெறும் ஒற்றை நிகழ்வாக நின்றுவிடவில்லை. தொடர்ந்து தன்னுடைய எழுத்தில் அகலவும் ஆழவும் அதைப் பயின்றுகொண்டே இருந்தார்.

ப்ரஸன்னா ராமஸ்வாமி
<prasannarama21@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

